

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி - வைகாசி - 2024 - ஜூன் | இணைய வழி - மலர் - 1 - இதழ் - 10

கால பைரவர் - காசி

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

குரோதி – வைகாசி

2024–ஜூன்

இணையவழி மலர் 1 – இதழ் 10

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்


## பொருளடக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

கோவிலூர் அருள்மிகு கொற்றவாளீசர் திருக்கோயில் உள்ள ஊர். அதனால் அதற்கு அப்பெயர் ஏற்பட்டது. அக்கோவிலூரில் வேதாந்தப் பாடம் கற்பிக்க நமது வேதாந்த மடம் ஏற்படுத்தப்பெற்றது. தற்போது கோவிலூர் கல்வி நகரமாக, மக்கள் நலம் தரும் மருத்துவ மையமாக விளங்கி வருகிறது.

### கோவிலூர் ஆண்டவர் விளையாட்டு மற்றும் உடற்பயிற்சி கல்லூரி

சீர் வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகள் கோவிலூரில் ஒரு நிகர்நிலைப் பல்கலைக் கழகம் அமைக்கத் திட்டமிட்டார்கள். அதற்கான ஆரம்ப கட்ட பணிகளை அவர்கள் காலத்தில் தொடங்கினார்கள். இதன் அடிப்படையில் கோவிலூரில் முதன் முதலில் கோவிலூர் ஆண்டவர் விளையாட்டு மற்றும் உடற்பயிற்சி கல்லூரி (Koviloor Aandavar sports & physical education college) துவங்கப்பட்டது. இக்கல்லூரியில் சேர்ந்து பயிலும் மாணவர்கள் உடற்கல்வியியல் (பிபிஎட்) என்ற இளநிலை பட்டப்படிப்பினைப் பெறுகிறார்கள். இது சென்னையில் உள்ள தமிழ்நாடு உடற்கல்வியியல் மற்றும் விளையாட்டுப் பல்கலைக்கழகத்தின் கீழ் இயங்கி வருகிறது. தற்போது இக்கல்லூரியில் பி.எஸ்.சி விளையாட்டுப் பயிற்சியளித்தல் (B.sc., Sports & coaching) என்ற பட்டப்படிப்பு புதிதாகத் தொடங்கப்பெற்றுள்ளது. இதனைப் படிப்பதன் மூலம் பள்ளிகளில் கல்லூரிகளில் எந்த மாணவர் எந்த விளையாட்டில் ஆர்வமாக உள்ளார் என்பதைக் கண்டறிந்து அவருக்கு அவ்விளையாட்டில் திறம்பட பயிற்சி அளிக்ககமுடியும். இப்படிப்பிற்குத் தற்போது நிறைய தேவை உள்ளது. எனவே இதனைப் படிக்க விரும்புவோர் நமது கல்லூரியில் இணைந்து உடனடி வேலை வாய்ப்பினைப் பெறலாம்.

### நாச்சியப்ப சுவாமிகள் பல்தொழில் நுட்பக் கல்லூரி

சீர்வளர் சீர் நாச்சியப்ப சுவாமிகளைத் தொடர்ந்து, சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் நாச்சியப்ப சுவாமிகள் பல்தொழில் நுட்பக் கல்லூரி (Nachiappa Swamigal Polytechnic college)யையும், கோவிலூர் ஆண்டவர் பதின்ம (Koviloor Aandavar

Metriculation Higher secondary school) மேல்நிலைப்பள்ளியையும், மற்றும் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியையும் தோற்றுவித்தார்கள். இக்கல்வி நிறுவனங்கள் வெற்றி கரமாகச் செயல்பட்டு வருகின்றன.

நாம் பட்டத்திற்கு வருவதற்கு முன் காரைக்குடி கம்பன் அறநிலையின் கல்வி நிறுவனமான கம்பன் கற்பகம் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளியை இருபத்தைந்து ஆண்டுகளாக நிர்வகித்து வந்த அனுபவம் இக்கல்வி நிறுவனங்களைச் செம்மையுடன் நடத்திச் செல்ல உதவி வருகின்றது. இருப்பினும் இக்கல்வி நிறுவனங்களைக் கவனிக்கத் தனித்த மேற்பார்வை வேண்டும் என்ற நிலையில் தாளாளர் டாக்டர் வீரப்பன் அவர்களை நியமித்து அவரின் மேலாண்மையின் கீழ் இக்கல்வி நிறுவனங்கள் வளர்ச்சி பெற்று வருகின்றன.

பாலிடெக்னிக் கல்லூரியில் கட்டடப் பொறியியல் (Civil), எந்திரவியல் (Mechanical), மின்னியல், மற்றும் மின்னணுவியில் (Electrical & Electronics), மின்னணுத் தொடர்பியல் (Electronic communications) ஆகிய பாடங்கள் கற்பிக்கப்பெற்று வருகின்றன. முன்னர் நடைபெற்றுவந்த படிப்புகளுடன் மாணவர்களுக்கு கூடுதல் திறன் மிக்க கல்வி, தொழில் பயிற்சி வழங்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது.

நம் பாலிடெக்னிக்கில் படிக்கின்ற மாணவர்கள் அனைவருமே அவர்கள் படித்து முடிக்கும் தருவாயில் பல நிறுவனங்கள் கல்லூரிக்கு வந்து வளாக நேர்காணல் (campus Interview) நடத்தி வேலைக்குச் சேர்த்துக் கொள்கின்றன. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் பணிகளில் சேர்ந்தவர்களுக்கு மாதம் ரூபாய் 15 ஆயிரத்திற்கு குறைவாக இருந்த சம்பளம் இப்போது சுமார் 20000 அளவிற்கு உயர்ந்திருக்கிறது. உடனடியாக வேலை கிடைக்கின்ற ஒரு கல்வி என்றால் அது பாலிடெக்னிக் கல்வி மட்டுமே ஆகும்.

பாலிடெக்னிக் கல்வி முடித்தவர்கள் அனைவரும் நல்ல பணி வாய்ப்புகள் பெற வேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் தற்போது நம்மிடம் வளாக நேர்காணலுக்கு வருகின்ற தொழில் நிலையங்களை எல்லாம் இப்போது நாம் அணுகி இருக்கிறோம். அவர்கள் மூலமாகவே நம் பாலிடெக்னிக்கில் படிக்கின்ற மாணவர்களை மூன்று மாத காலத்திற்கு அந்தந்த கம்பெனிகளிலேயே அப்ரண்டீஸ் ஆக அல்லது இண்டன்ஷீப் ஆக சேர்த்து அதன்பின் பணிக்கு எடுத்துக் கொள்ள அவர்கள் உதவி செய்வார்களா என்ற அடிப்படையில் இப்போது பேச்சுவார்த்தை நடந்து வருகின்றன இதற்கு அடுத்த நிலையில் தொழில் நிலையங்களுக்கு வேண்டிய கல்வியை அளிக்கத் தேவையான உபகரணங்களை அந்தந்த நிறுவனங்களே நமது பாலிடெக்னிக் கல்லூரியில் ஏற்படுத்தினால் அதாவது நமது கல்லூரியை அவர்களுடைய சோதனைக் கூடமாக, களப்பணிக் கூடமாக ஏற்படுத்தினால் அதன் வழியாக அனைத்து மாணவர்களையும் அவர்களுக்கு தகுந்தார் போல் நாம் பயிற்சி அளித்தே அனுப்பலாம். ஆகவே தொழிற்சாலைகளுக்குப் பயிற்சி அளிக்கின்ற செலவும் மிச்சமாகும். ஒரு மாணவன் ஆரம்ப கால பயிற்சியில் சேர்ந்த அன்றிலிருந்து வேலை செய்ய முடியும். இதற்காக சில நிறுவனங்களுடன் இப்போது பேச்சுவார்த்தை துவங்கி உள்ளோம். விரைவில் அது நல்ல விதமாக நிறைவடையும் என்ற எண்ணம்

நமக்கு உள்ளது.

மேலும் நாம் கோவிலூரில் ஐடிஐ (I.T.I) என்ற பயிற்சி நிறுவனத்தையும் நடத்தி வருகிறோம். இது மாநில அரசின் அங்கீகாரம் பெற்ற ஓராண்டுகாலத் தொழிற்பயிற்சிக் கல்வித் திட்டம் ஆகும். இதில் கல்வி பயிலும் மாணவர்களுக்கும் உடனடியாக வேலை பெறும் வாய்ப்பு உள்ளது.

மேலும், குறுகிய காலப் பயிற்சியில் சுய தொழிலோ அல்லது உடனடி வேலையோ கிடைக்க என்ன செய்யலாம் என்று சிந்தித்த போது மத்திய அரசு அங்கீகாரம் பெற்ற ஸ்கில் டெவலப்மென்ட் (Skill Development) பயிற்சிகளை பாலிடெக்னிக் கல்லூரியில் கொண்டு வரலாம் என்று முடிவு செய்தோம். இவ்வனுமதிக்கான செயல்பாடுகள் நடைபெற்றுவந்த நிலையில் தற்போது இதனைத் தொடங்குவதற்கான அனுமதியும் கிடைத்து விட்டது. விரைவில் இதற்கான மாணவர் சேர்க்கை நடைபெறும்.

இரண்டு முதல் மூன்று மாதங்கள் வரை இலவசமாக நடத்தப் பெறும் இப்ப யிற்சியில் கலந்து கொள்பவர்களுக்கு மத்திய அரசின் சான்றிதழ் அளிக்கப்படும் இந்தப் பயிற்சியைப் பயன்படுத்தி வேலைக்கு செல்வதற்கும், சுயதொழில் தொடங்குவதற்கும் மிக அருமையான வாய்ப்புகள் உள்ளன. வேறு படிப்பு படிப்பவர்களும் இந்தக் குறுகிய காலப் பயிற்சியை பெறலாம். இப்பயிற்சி அவர்களின் வாழ்வில் நல்ல பொருளாதார நிலையைப் பெற்றுத் தரும். எனவே இத்தொழில் பயிற்சிகளில் சேர தொழில் பழகுநர்களை வரவேற்கிறோம்.

## கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேஷன் பள்ளி

கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேஷன் பள்ளியைப் பொறுத்தவரையில் இளம் வகுப்புகளுக்கு மாண்டிச்சேரி முறை பின்பற்றப்பட்டு வெற்றியுடன் நடைபெற்று வருகிறது. ஒன்று முதல் ஐந்து ஆண்டு ஐந்தாம் வகுப்பு படிக்கும் மாணவ, மாணவியர்க்கு கற்பித்தல் பயிற்சி அளிப்பதற்கு ஒசூர் டிவிஎஸ் பள்ளியில் முதல்வராக இருபத்தைந்து ஆண்டு காலம் பணியாற்றிய திருமதி ஸ்ரீவித்யா மௌலி அவர்கள் நியமிக்கப்பெற்றுள்ளார். அவர்கள் கொடுத்த வழிமுறைகளை கையாண்டு பாலர் பள்ளி தரம் உயர்த்தப்பெற்றுள்ளது. மேல்நிலை, மற்றும் உயர்நிலைப் பள்ளி சிறந்த தேர்ச்சி விகிதங்களைப் பெற்று சிறப்புடன் நடைபெற்றுவருகிறது.

## நாச்சியப்ப சுவாமிகள் கலை, அறிவியல் கல்லூரி

நாச்சியப்ப சுவாமிகள் கலை, அறிவியல் கல்லூரியில் இளநிலை மற்றும் முதுநிலைப் பட்டப் படிப்புகள் நடத்தப்படுகின்றன. வணிகவியல் (B.com), கணிப்பொறி அறிவியல் (B.Sc Computerscience), பி.எஸ்.சி காட்சித் தொடர்பியல் (B.Sc., Visuval communication) ஆகியன சிறப்பான துறைகளாக விளங்குகின்றன. இதில் வணிகவியல் துறை பயிலும் மாணவர்களுக்குச் சென்ற ஆண்டு முதல் கூடுதல் தகுதியாகப் பட்டைய கணக்காளர்கள் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது. மேலும் சி.ஏ (chartered accountant) பவுண்டேஷன் மற்றும் இன்டர் போன்றவற்றிற்கு இலவசமாக பயிற்சி அளிக்கும் திட்டத்தையும் சென்ற ஆண்டு செயல்படுத்தினோம். சி.ஏ. தேர்வினைக் கோவிலூரில் எழுதும் மையத்தையும் நாம் பெற்றுள்ளோம்.

கணிப்பொறி அறிவியல் துறையைச் சார்ந்த ஆசிரியர்களும் மாணவர்களும் இணைந்து தானியங்கி மணி (Automat-

ic School/College Bell) அமைப்பினை உருவாக்கியுள்ளனர். இதனை நமது கல்வி நிறுவனங்கள் அனைத்தும் பயன்படுத்தி வருகின்றன. கம்பன் கற்பகம் பள்ளியிலும் இது பயன்பாட்டுக்கு வந்துள்ளது. இவ்வமைப்பு மிகவும் சிறப்பாக செயல்படுகிறது.

இத்துறையின் இரண்டாவது கண்டுபிடிப்பு தானியங்கி தண்ணீர் நிரப்பும் கருவியாகும். இத்தானியங்கி தண்ணீர் நிரப்பும் அமைப்பு கோவிலூரில் சுமார் ஐந்து இடங்களில் தற்போது வெற்றிகரமாகச் செயல்பட்டு கொண்டிருக்கிறது.

இத்துறையின் மூன்றாவது கண்டுபிடிப்பு ஜியோ டேக்கிங் (Geo-Tagging) முறையில் வருகை பதிவேடு எடுக்கும் அமைப்பு ஆகும். கல்லூரியில் ஒவ்வொருவருக்கும் வருகை பதிவேடு எடுப்பது என்பது நேரத்தினை அதிக அளவில் எடுத்துக்கொள்ளும். இதனை மாற்ற, மேலும் இது உண்மைத் தன்மையுடன் செயல்பட ஏற்ற வகையில் ஒரு மென்பொருள் தாயரிக்கப்பெற்றுள்ளது. ஜியோ டேக்கிங் என்ற முறையில் நம் கல்லூரியில் இருக்கும் ஒவ்வொரு ஆசிரியையும் எல்லா மாணவர்களையும் புகைப்படம் எடுப்பது அல்லது குழுவாக புகைப்படம் எடுப்பது. அதன்பின் புகைப்படத்தில் அவர்கள் உருவம் தெரிந்தவுடன் அவர்களுக்கு வருகை பதிவேடு செய்யப்படும். இந்த ஒரு மென்பொருளை நம் கல்லூரி கணினி அறிவியல் துறையைச் சேர்ந்தவர்கள் வெற்றிகரமாகச் செய்திருக்கிறார்கள் இதன் செலவை குறைப்பதற்கான முயற்சிகள் இப்போது நடந்து கொண்டிருக்கின்றன விரைவில் இதை கல்வி நிறுவனங்களுக்கு மிகவும் குறைவான விலையில் கொடுப்பதற்கு நாம் தயாராக இருக்கிறோம்.



நம் கல்லூரி விஷுவல் கம்யூனிகேஷன் துறையும் திரு AVM குமரனின் புதல்வர் திரு சண்முகம் நடத்தி வரும் சென்னை ஆவிச்சி கலை மற்றும் அறிவியல் கல்லூரியும் இணைந்து செயல்பட வாய்ப்பு ஏற்பட்டது. அவர்கள் நடத்துகின்ற விஷுவல் கம்யூனிகேஷன் மாஸ்டர் வகுப்பினை நம் கல்லூரியில் அவர்கள் நடத்தும் அந்த நேரத்திலேயே ஒளிபரப்புவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறோம்.

திரு சண்முகம் அவர்கள் இப்போது உலகத் திரைப்படத் திருவிழா அமைப்பின் (Chennai International Film Festival Committee) தலைவராக உள்ளார். சென்னையில் இந்த விழா நடைபெறுகின்ற அதே நேரத்தில் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்திலும் அந்த திரைப்படங்கள் காட்சிப்படுத்தப்படும் நிலையும் வரவுள்ளது. இதுவரை சென்னையைத் தவிர வேறு எங்கும் இவ்விழா நடைபெறவில்லை. தற்போது காரைக்குடியில் இவ்விழாவின் நிகழ்வுகள் பார்வைக்கு வர இருப்பது என்பது அதிசயமான ஒன்று. ஆச்சர்யமான ஒன்று. அது நிறைவேறப் போகிறது.

நமது நாச்சியப்ப சுவாமிகள் கலை

அறிவியல் கல்லூரியில் சேருகின்ற மாணவ மாணவியர்களுக்கு அவர்கள் 12 ஆம் வகுப்பில் எடுத்த மதிப்பெண்ணை பொறுத்து 50 சதவீதம் வரை கல்வி உதவித் தொகை (ஸ்காலர்ஷிப்) கொடுக்கிறோம் என்ற மகிழ்வான செய்தியை இங்கு நான் பகிர்வது சிறப்பு என்று எண்ணுகிறேன்.

இந்த முன்னெடுப்புகள் அனைத்துமே நம் கல்வி நிறுவனங்களைப் பெருவளர்ச்சி பெற வைக்கும்.

நகர கோவில்களை

## அறநிலையத்துறை கட்டுப்பாட்டிலிருந்து விதிவிலக்குப் பெறுவது

கல்விப் பணிகளின் பெருவளர்ச்சியோடு ஆன்மீக வளர்ச்சியும் நடைபெறுவது என்பது சிறப்பான நிலையாகும். நாம் பட்டத்துக்கு வந்தவுடன் நகரத்தார் வாழ்கின்ற 74 ஊர் கோவில்களுக்கும், நகரத்தார் பிரிவு கோயில்களான ஒன்பது கோவில்களுக்கும் அறநிலையத்துறை கட்டுப்பாட்டில் இருந்து விலக்கு பெறுவதற்கான முயற்சியை செய்ய வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. அதன் அடிப்படையில் எல்லா நகர கோயில்களுக்கும் ஒன்பது கோயில்களுக்கும் கடிதம் எழுதி அவர்களிடம் இருந்து விபரங்களை பெற முயற்சி செய்தோம் அதற்கென ஒரு கூட்டமும் ஏற்பாடு செய்தோம். அந்தக் கூட்டத்தில் சுமார் 20 பேர்கள் மட்டுமே கலந்து கொண்டார்கள் 17 கோயில் விபரங்கள் நமக்கு கிடைத்தன.

பல அலுவல்கள் காரணமாகவும் இந்த முயற்சிக்கு இன்னும் அடிப்படை தரவுகள் வேண்டும் என்ற அடிப்படையிலும் இந்த முயற்சியை தள்ளி வைத்திருந்தோம். இப்போது காசி சிக்ரா நந்தவனத்தை மீட்டதில் பெரும் பங்காற்றிய திரு முத்துக்குமார் அனைத்து ஊர்களுக்கும் நேரில் சென்று அந்த கோவில்களில் விபரமாக நாம் செய்யப் போகின்ற முயற்சிகளைப் பற்றி எடுத்துச் சொல்லி முக்கியமான தரவுகளை பெற்றிருக்கிறார்கள். அவற்றை ஒருங்கிணைக்கின்ற முயற்சியில் நாம் இப்போது ஈடுபட்டு இருக்கிறோம் இன்னும் ஓரிரு மாதங்களில் அரசாங்கத்திடம் சென்று நாம் Denomination Temple என்ற அடிப்படையில் நமக்கு அவர்கள் கட்டுப்பாட்டில் தளர்ச்சி பெற நாம் முன்னெடுக்கத் தயாராக இருக்கிறோம். நகரத்தார் அனைவரும் ஒருங்கிணைந்து இந்த முயற்சியில் பங்காற்ற வேண்டும் என விரும்புகின்றோம்.

இதைத் தவிர ஒரு கால பூஜை கூட இல்லாத கோவில்களை நம் மாவட்டங்களில் ஒரு கால பூஜை செய்வதற்கு ஏற்பாடு செய்வதற்கான முயற்சியும் இப்போது மீண்டும் துவங்கி உள்ளோம்.

இவ்வாறு கல்வி வளர்ச்சிப் பணிகளிலும் ஆன்மிக வளர்ச்சிப் பணிகளிலும் தன்னிகரற்ற தொண்டினை கோவிலூர் ஆதீனம் செய்துவருகிறது. இதற்குத் தங்களின் ஆதரவும் ஒத்துழைப்பும் தேவை.

திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.

## கோவிலூரின் கதை - 6

# சீர் வளர் சீர்
# அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகள் வரலாறு




சீர் வளர் சீர் அண்ணாமலை
ஞான தேசிக சுவாமிகள்
ஆண்டவர் வரலாறு
(ஆறாம் பட்டம் ) (1911–1919)



**- முனைவர் மு.பழனியப்பன்**
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

திருக்களர் ஆண்டவரின் சீடர்களாக விளங்கியவர்கள் பலராவர். ஐம்பதுக்கும் மேற்பட்ட சாதுக்கள் இவரின் சீடர்களாக விளங்கியுள்ளனர். இவர்களில் ஒருவர் அண்ணாமலை என்பவர் ஆவார். இவர் இளம் வயதிலேயே துறவு கொள்ள விருப்பம் கொண்டவர். அவ்விருப்பத்தை மேலும் மேலும் கனிவித்து, உறுதிப் படுத்தி உரிய வயதில் இவர் துறவு கொள்ள

ஆச்சாரியர் ஆணைதந்தார். துறவும் கொண்டு ஆச்சாரியருக்குப் பின் கோவிலூர் பட்டமும் ஏற்றுச் சிறந்தவர் சீர் வளர் சீர் அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகள்.

### இராயவரம் பெற்ற வரம்

இராயவரத்தில் இரணிக் கோயில் மரபில் தோன்றியவர் அண்ணாமலை ஞான தேசிகர். இவரைப் பெற்றவர்கள் நாச்சியப்பர், ஏகம்மை ஆகியோர் ஆவர். இவர்களுக்கு நெடிது நாள் குழந்தை பாக்கியம் கிடைக்காமல் இருந்தது. இவரின் இல்லத்திற்கு வருகை புரிந்து சிவனடியார் ஒருவர் திருவண்ணாமலைக்குச் சென்று, அவரை நாளும் துதித்தால் புத்திரப் பேறு கிடைக்கும் என்று கூறினார். இதனை ஏற்று நாச்சியப்பரும் ஏகம்மையாரும் திருவண்ணாமலைக்கு கார்த்திகை நட்சத்திரத்திற்குச் செல்வதை வழக்கமாகக் கொண்டனர். திருவிளக்குகள் ஏற்றி வழிபட்டனர். இறைவன் கருணையால் அழகான ஆண்மகவு பிறந்தது. அண்ணாமலையாரின் கருணையால் பிறந்த அந்தக் குழந்தைக்கு அண்ணாமலை என்றே பெயர் சூட்டினர்.

### தேனிப்பட்டி கொண்ட வரம்

அண்ணாமலை நற்கல்வி கற்றுப் பல கலைகளிலும் தேர்ந்து வந்தார். அவரின் உள்ளத்தில் சிவஞானமும் கூடி வளர்ந்து வந்தது. இவரை தேனிப்பட்டி நகரில் உள்ள அருணாசலம், உமையம்மை ஆகியோர் தத்துப் பிள்ளையாக எடுத்துக்கொண்டனர். இவரைத் தத்துப் பிள்ளையாக எடுத்துக்கொண்ட அருணாசலனார் கோவிலூர் மடத்தில் வேதாந்தப் பாடம் கற்றுவந்தார். இதன் காரணமாக, கோவிலூர் மடத்திற்கு அடிக்கடி செல்ல வேண்டியவரானார். இவருடன் தத்துப் பிள்ளையான அருணாசலமும் கோவிலூர் சென்று வேதாந்தம் கற்றுவந்தார். பர்மாவிற்குப் பலமுறை சென்று செல்வமும் சேர்த்து வந்தார்.

### இல்லறமும் துறவறமும்

அண்ணாமலையாருக்குத் திருமண வயது வர திருமண ஏற்பாடுகளை அருணாசலனார் செய்தார். அண்ணாமலை தன் தந்தையிடம் திருமண பந்தம் வேண்டாம் என்று தவிர்த்துப் பார்த்தார். ஆனால் இல்லறம் ஏற்று, இல்லத்தில் இருந்து விருந்தோம்பல் போன்ற பல தர்மங்களைச் செய்து அதன்பின் துறவு நோக்கம் ஏற்பட்டால் துறவிற்குச் செல்லலாம் என்று சமாதானம் சொல்லி அண்ணாமலைக்கு அரிமழத்தைச் சார்ந்த உமையம்மை என்ற பெண்ணைத் திருமணம் செய்து வைத்தார்.

இவரின் துறவு எண்ணம் வளர்ந்து வந்து கொண்டே இருந்தது. சாக்கோட்டை வீரசேகர உமையாம்பிகையை வணங்குவதும் அங்குள்ள வேதாந்த மடத்தின் துறவி வீரப்பரை வணங்குவதும் இவரின் வழக்கமாக இருந்தது. அவரின் வழியாக ஞான நூல்களையும் ஞான அனுபவங்களையும் பெற்றார்.

இல்லறத்தின் பயனான குழந்தைப் பேறு இவருக்கும் வாய்க்காது இருந்தது. இதன் காரணமாகவும், உறவினர்களின் ஏற்பாட்டின் படியும் இரமேஸ்வர யாத்திரையை இவர் மேற்கொண்டார். இதனைத் தொடர்ந்து மதுரை சென்று ஆலவாய் அண்ணலை இவரும் இவரின் மனைவியார், சுற்றத்தார் வணங்கினர். இப்பயணம் முடிந்த

நிலையில் தன் மனையாளை ஊருக்கு அழைக்கும்போது அவர் உறவினருடன் வந்தோம் அவர்களுடனேதான் திரும்ப வேண்டும் என்றார். அவரை உறவினருடன் வரவிடுத்துத் தான் மட்டில் ஊர் வந்தார். வந்தவருக்கு இல்லறத்தை விட்டு விலகித் துறவறம் மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் மேலெழுந்தது. தன் வளர்ப்புத் தாயார் கையில் பிச்சை பெற்று துறவு மேற்கொள்ளப் புறப்பட்டார்.

கோவிலூருக்கு வந்து ஐந்தாம் பட்டமாக விளங்கிய சீர் வளர் சீர் வீரப்ப ஞான தேசிக சுவாமிகளிடம் அடைக்கலம் அடைந்தார். உடல் , பொருள், ஆவி அனைத்தையும் சற்குருவிடம் ஒப்படைத்து அங்கேயே உறைவதனார். பலமுறை அவரிடத்தில் துறவு நிலை பெற வேண்டுகோள் வைத்தும் அது நிறைவேறவில்லை. சீடர் அண்ணாமலைக்குப் பற்பல ஏவல்களை வழங்கினார். அதனைச் செவ்வையுடன் நிறைவேற்றி அடுத்த பணிக்குக் காத்திருந்தார் அண்ணாமலையார்.

சற்குரு ஞானவாசிட்டம் தவிர அனைத்து வேதாந்த பாடங்களையும் இவருக்குக் கற்பித்தருளினார். இவருடன் இவரின் இனிய தோழர் வெள்ளியங்கிரி சுவாமிகளும் பாடங்களைத் தெளிவுடன் கற்று விவாதித்து வந்தனர். இருவரும் பாடம் சொல்லுவதில் வல்லார் ஆயினர். இவரின் துறவு எண்ணத்தின் வலிமையை உணர்ந்த சீர் வளர் சீர் வீரப்ப ஞான தேசிக சுவாமிகள் இவரைத் திருவையாற்றுக்குச் செல்லக் கட்டளையிட்டு, அவரிடத்தில் துறவாடையைத் தந்து "தட்சிணாமூர்த்தி சன்னதியில் துறவு பூணுக " என்றுரைத்தார். இதனை எதிர்பார்த்துக் காத்திருந்த அண்ணாமலையார் திருவையாற்றுக்குச் சென்று அவ்வண்ணமே செய்து துறவேற்றார். திருவையாற்றைச் சுற்றியுள்ள பல தலங்களைத் தரிசித்து, மீளவும் கோவிலூர் வந்து சேர்ந்தார்.

இவரிடம் கோவிலூர் மடத்தின் பல பொறுப்புகள் நிர்வகிக்கத் தரப்பெற்றன. இவரின் நன்னிலையை ஏற்று இவருக்கு ஞானவாசிட்டம் சொல்லத் தொடங்கினார் வீரப்ப சுவாமிகள். ஞானவாசிட்டம் பாடம் கேட்டலின் நிறைவு நிகழ்வைச் சிறப்பாக நடத்தினார் அண்ணாமலை சுவாமிகள். சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள், வளவனூர் மட சுவாமிகள், பொருள்வைத்த சேரி, சுப்பிரமணிய சுவாமிகள் ஆகியோர் இந்நிறைவிற்கு வருகை தந்துச் சிறப்பித்தனர். இதுமுதல் இரண்டாம் நிலை பாடம் சொல்லும் ஆசிரியராக அண்ணாமலை சுவாமிகள் ஏற்கப்பட்டார்.

## தலயாத்திரை

இதன்பின் இவருக்கு தலயாத்திரை செய்ய குருவருள் ஆணை கிடைத்தது. அதனைத் தலைமேல் ஏற்று இராமேஸ்வரம், கோகர்ணம், சிருங்கேரி, காசி, பிரயாகை, அயோத்தி, மதுரா, பிருந்தாவனம், துவாரகை, குருசேத்திரம், ஹரித்துவார், ரிசிகேஷ், பத்ரிநாத், கேதாரம் போன்ற தலங்களைத் தரிசித்தார். இதனோடு வடமொழியிலும் அறிவு பெற்று வேதங்களைக் கற்றுவந்தார். இறையருளும் குருவருளும் அழைப்பதாக இவருக்குத் தோன்ற, கோவிலூருக்கு அண்ணாமலை சுவாமிகள் மீண்டார்.

கோவிலூருக்கு வந்தபின்பு மடத்துப் பணிகளும், ஆசாரியருக்கு உதவும்

பணிகளும் செம்மையுடன் நடந்து வந்தன. இந்நிலையில் திருக்களரில் சீர் வளர் சீர் வீரப்ப சுவாமிகள் விதேக முக்தி அடைந்தார். அவரின் சாமதி பிரதிஷ்டையை அண்ணாமலை சுவாமிகள் செய்து வைத்து குருபாதம் பணிந்தார்.

### கோவிலூர் மடத்தின் ஆறாம் பட்டம்

இதன்பின் கோவிலூர் மடத்தின் அடுத்த பட்டத்திற்குத் தகுதியானவர் அண்ணாமலை சுவாமிகளே என்று எல்லோரும் ஏற்க அப்பட்டத்திற்கு உரியவரானார் சீர் வளர் சீர் அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகள். சுவாமிகள் குருபிரானின் வழியில் தன் ஞானப் பாதையைத் தொடர்ந்தார்.

அருள்மிகு கொற்றவாளீசர் திருப்பணிகளிலும், மடத்தின் பணிகளிலும் இருந்த சவால்கள் பலவற்றை எதிர்கொண்டு சுவாமிகள் திறம்பட சேவையாற்றினார். இவர் வேதாந்த பாடம் சொல்வதில் ஈடு இணையற்றவராக விளங்கினார். அந்தணர் முதலான அனைத்து குலத்தவர்களும் இவரின் அருள்மொழிகளைக் கேட்டு இவரைச் சரண்புகுந்தனர். இவருடன் ஒன்றாய் இருந்த வெள்ளியங்கிரி சுவாமிகள் வியந்து போற்றும் வண்ணம் இவர் அருமைப் பாடம் போதித்தார்.

திருநெல்லை அம்மன் பவனி வர நடைபெற்றுவந்த திருத்தேர் பணிகளை முற்றுவித்து அம்மன் உலா வரச் செய்தார். அருள்மிகு கொற்றவாளீசர் பள்ளியறையைப் பிரித்து இப்போது இருக்கும் இடத்தில் அழகுடன் நிர்மானித்தார். திருக்களரில் தன் குருவிற்குச் சிறப்பான ஆலயத்தை கர்ப்பகிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியவற்றை உள்ளடக்கி அக்காலத்தில் ஒரு இலட்சம் ரூபாய் செலவில் அன்பர்கள் நிதி உதவி கொண்டு உருவாக்கினார். அங்கு சாதுக்கள் தங்கி இருக்க மடம் கட்டுவித்தார். அருகில் இருக்கும் மருதவன ஆலயத்தினைச் சீர்படுத்தி குடமுழுக்கு நடக்க உதவினார். இப்பணிகள் தொடர்ந்து நடந்து வர மடத்திற்கு அருகில் காவிரி ஆற்றுப் பாசனத்தில் பத்தொன்பது வேலி நிலத்தை வாங்கி அதன் வருவாயில் திருக்களர் இறைவனின் நாள் பூசை அறத்தை நடக்க வைத்தார்.

இவரின் வழிபடு தெய்வமான சிதம்பரம் நடராசருக்கு சிதம்பரத்தின் தனித்துவமான கொஸ்து, மற்றும் நித்திய அன்னப்பாவாடை அறக்கட்டளை ஒன்றை ஏற்படுத்தினார். இதற்கு கோவிலூர் மடம், கல்லல் மெ. ரா. வெள குடும்பம், காரைக்குடி மெ.செ.ச குடும்பம் ஆகியன வைப்புநிதி தந்தன. இடையில் தயக்கமாக இருந்த இக்கட்டளை, மீண்டும் சீர் வளர் சீர் நாச்சிப்ப ஞான தேசிக சுவாமிகளால் மீட்டெடுக்கப் பெற்று, இன்று வரை சிறப்பாக நடைபெற்று வருகிறது.

மடத்தின் செலவுகள் கட்டுக்குள் அடங்கி அதிக அளவில் ஆண்டு வருமானம் வரச் செய்த பெருமை இவர் காலத்தில் நடந்தது. இவர் காலத்தில் பிரம்ம வித்யா பிரசாரண சபை நடத்தப்பெற்றது, கோவிலூர் ஆடிப் பூர உற்சவத்தின்போது இந்த சபை கூட்டப்பெற்று மக்களுக்கும் இச்சபையின் வாயிலாக பிரம்ம ஞானம் கிடைக்க வழி செய்யப்பட்டது. இதற்கு மிகச் சிறந்த ஞானவான்கள் அழைக்கப்பெற்று அவர்களுக்கு

அக்காலத்தில் மிகப்பெரிய சன்மானம் வழங்கப்பெற்றது

### வேதாந்த வெற்றிக் கொடி

வேதாந்த அறிவு பெருக்கும் இச்சபைக்கு ஆதரவும் எதிர்ப்பும் இருந்தது. காரைக்குடியில் சில முரண்பட்ட கருத்துகள் நிலவின. வேதாந்தம் பற்றி விமர்சனம் எழுந்தது. இதனை மறுக்க முனைந்தார் சுவாமிகள். பலரும் இது வேண்டாத செயல். நிந்தை தானாக அழியும் என்று சொன்ன நிலையிலும் சுவாமிகள் இதற்கு மறுப்பு செய்தாக வேண்டும் என்ற கருத்தினைக் கொண்டார்.

சங்கராரின் ஆசி இருக்க, கவலை கொள்ளாது, காரைக்குடி விஜயதசமி மண்டபத்தில் மகா விராட் சபை என்ற ஒரு சபையைச் சீர் வளர் சீர் அண்ணாமலை தேசிக சுவாமிகள் கூட்டினார். இதற்கு சாதுக்கள், சாஸ்திரிகள், சுப்பைய ஞான தேசிகர் போன்றோர் வந்திருந்து வேதாந்த வெற்றி விளக்கம் தந்தனர். இந்நாளில் சுவாமிகள் வேதாந்தத்திற்கு எதிர் கருத்துகள் சொல்வோரையும் வரவேற்றார்.

மேலும் அவர்களின் இல்லத்திற்குச் சென்று அவர்களை வரச் சொன்னார் . எதிர்ப்பாளர் எவரும் வரவில்லை. நிறைவு நாளில் ஜகத்குரு ஆதி சங்கரரின் திருவுருவப் படத்தை அலங்கரித்துக் காரைக்குடி நகர் முழுவதும் உலா வரச்செய்து வேதாந்த வெற்றிக் கொடியை நாட்டினார்.

இச்சமயத்தில் சிருங்கேரி ஸ்ரீ சந்திரசேகர பாரதி சுவாமிகள், நரசிம்ம பாரதி சுவாமிகள் ஆகியோர்தம் சாமாதி ஆலயக் குடமுழுக்குவிழாவிற்கு அவர்கள் அழைத்ததன் பேரில் சீர்வளர் சீர் அண்ணாமலை தேசிக சுவாமிகள் அடியார்கள், சீடர்கள் பலருடன் சென்று வந்தார். இக்கோயில்களுக்கு நாகாபரணம், குவளை, தங்கத்தில் கல் இழைத்த உத்திராக்க மகர கண்டிகை, ஆபரணங்கள் அளித்து மகிழ்ந்தார். மேலும் இவ்வாலயத்தில் நித்திய பூசைக்கு வைப்புநிதி தந்தார்.

### அச்சகம் வைத்து அருள்நூல்கள் வழங்கியமை

வேதாந்த நூல்களைத் திருத்தமுடன் வெளியிட வேண்டும் என்று எண்ணிய சுவாமிகள் இதற்காக ஓர் அச்சகத்தைக் கோவிலூரில் ஏற்படுத்தினார். இதன்வழி பல நூல்கள் வெளிவந்தன. வீர. சுப்பையா சுவாமிகள், வீர. காசிகாநந்த சுவாமிகள், சி.சுப்பையா சுவாமிகள் போன்றோர் பல நூல்களை எழுதி இதன்வழி வெளியிட வாய்ப்பு கிடைத்தது.

### நிறைவு

இவ்வாறு சுவாமிகளின் அருளாட்சி எட்டு ஆண்டுகள் சிறப்புடன் நடந்துவந்தது. அவர்களுக்குத் தனது முத்திக் காலம் தோன்ற தம்மிடம் பாடம் கேட்டுவந்த மகாதேவ சுவாமிகளை அழைத்து, அவரிடம் தன் படுக்கையில் இருந்த எலும்பிச்சம்பழத்தைத் தந்து "கோவிலூர் மடாலயத்தில இனி குருமூர்த்தமாக இருந்து, நடத்தி வரவேண்டியது" என்று கூறி அருளினார்.

சீர் வளர் சீர் அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகள், 1919 ஆம் ஆண்டு தமிழுக்கு, சித்தார்த்தி ஆண்டு வைகாசி மாதம் எட்டாம் நாள் பரிபூரணம் அடைந்தார். இவரின் அருட்கோயில் கோவிலூர் மடத்தினில் உள்ளே அமைந்துள்ளது. அதனைத் தரிசித்து அன்பர்கள் நலம் பெறுக.

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

பகுதி-8

## பேரறி பொழில் இறுத்த படலம்

[60 பாடல்கள்]



**முனைவர் சரசுவதி இராமநாதன்,**
பள்ளத்தூர்

சீதாதேவி தந்த ஒளிமயமான சூளாமணியைப் பத்திரமாக ஆடை நுனியில் பொதிந்து வைத்துக்கொண்டு விடை பெற்ற அனுமன், சிறு வேலை தான் செய்திருக்கிறேன். இன்னும் செய்ய வேண்டிய பெரிய காரியம் உளது என நினைத்தான். இலங்கையைக் கடலில் வீழ்த்தி விட்டு இராமனிடம் தேவியாரைச் சேர்க்கவில்லையே! வஞ்சகன் தசகண்டனின் பத்துத் தலைகளையும், இருபது தோள்களையும் கட்டிச் சிறையில் வைக்கவில்லையே! இராவணின் கண் எதிரே அவனது மனைவி மண்டோதரியைச் சிறை எடுத்து போகவில்லையே! எதாவது செய்து அரக்கர் போரிட வருமாறு செய்ய வேண்டாமா! என யோசித்தான்!

இந்த அசோகவனத்தை அழித்தால் அரக்கர் சினம் கொண்டு போரிட வருவார்கள் என்று நினைத்தவுடனே தன் கால்களில் அசோகவனத்தை அழிக்கத் தொடங்கிவிட்டான்.

**சொல்லழகு**

முடிந்தன; பிளந்தன; முரிந்தன; நெரிந்த;
மடிந்தன; பொடிந்தன; மறிந்தன; முறிந்த;
இடிந்தன; தகர்ந்தன; எரிந்தன; கரிந்த;
ஒடிந்தன; ஒசிந்தன; உதிர்ந்தன; பிதிர்ந்த
(701)

எத்தனை சொற்கள்! சிறிய சொற்கள்! பெரிய அழிவைக் குறிப்பிட்டன! மரங்களை வேரோடு பேர்த்து எறிந்தான். இங்கிருந்து அனுமன் வேரோடு பறித்தெறிந்த மரங்கள், வானுலகத்துத் தேவர்களின் சிங்காரச் சோலைகளைச் சிதைத்தன. அனுமன் வீசி எறிந்த மரங்கள் எல்லா உலகங்களிலும் சென்று விழுந்தன. இராவணனுடைய சோலையின் மணமிக்க மலர்களைத்

தேவலோகத்து மங்கையர் பறித்து மகிழ்ந்தனர். மரங்கள் ஒன்றோடொன்று மோதித் தூளாக விழுந்தன. யுக முடிவில் நட்சத்திரங்கள் விழுவதை ஒத்தன. சோலையின் மலர்க்கூட்டங்கள் சிதறி, அலைகடலில் விழ, மீன்கள் மலர், அரும்பு அவற்றிலிருந்த தேனை உண்டுகளித்தன. கடலில் நறுமண மலர்கள் கலந்ததால் புலால் மணம் மாறி, நறுமணம் எங்கும் வீசின. அனுமன் வேர் பறித்து வீசிய மரங்களால் கடல் தூர்ந்து போனது. காலால் நடந்தே கடலைக் கடந்து விடலாம் எனும்படி ஆனது. அனுமன் வீசிய மரங்களால் அரக்கரின் வீடுகளும் இடிந்தன. முன்பு இராவணனால் தேவருலகில் இருந்து கொண்டு வரப்பெற்ற கற்பகமரங்கள் இப்போது அனுமன் வீசியதும், மீண்டும் அமரர் உலகில் சென்று நிலைபெற்றன. மணிகள் பதித்த திண்ணைகள், மண்டபங்கள், குளங்கள், சுவர்கள் எல்லாவற்றையும் அழித்தான். அனுமன் வீசிய மரங்களின் மலர்கள், வானத்தில் நட்சத்திரங்கள் போல விளங்கின. இலங்கை நிலைகெட்டுக் கலங்கும்படி அழிவு செய்தான் அனுமன். ஒரு குரங்கு என் சோலையை அழித்ததை நீ வேடிக்கை பார்த்தாயா? என இராவணன் கோபித்துத் தண்டிப்பான் என அஞ்சி வானத்துள் சந்திரன் மறைந்து கொண்டான்.

## அனுமனின் கோபம்

மலை போலத் திரண்ட தோள்களையுடைய அனுமன் சினந்து, பாய்ந்து மலர்க் கொடிகள், மரங்கள் ஆகியவற்றை வேரோடு பறித்து வீச, அங்கிருந்த பறவைகள் அப்படியே



விண்ணுலகிற்குச் சென்றன. விலங்குகள் அச்சத்தால் கத்தின. பறவைகள் பல கடலில் விழுந்தன!

சீதை இருந்த அந்த ஒரு மரம் மட்டும் அழியாமல் இருந்தது. தேவி தன்னிடமிருந்த ஒரே அணிகலனான சூளாமணியை அனுமனிடம் இராமனுக்கு அடையாளம் காட்டத் தந்துவிட்டாளே என்று, சீதை சிரசில் அணிய ஒரு நகை வந்தது போலச் சூரியன் மாணிக்கம் போல் ஒளியுடன் உதித்தான். அரக்கிகள் சீதையிடம், ‘இந்தக் குரங்கு யார் உனக்குத் தெரியுமா! என்று கேட்டனர்.

சீதாதேவி “மாயம் வல்ல உங்களுக்குத் தானே இதெல்லாம்

தெரிந்திருக்கும். நல்லவர்களான எங்களுக்கு நல்லவர்களை மட்டுமே தெரியும். என்று கூற அரக்கியரும், மற்ற அரக்கர்களும் இராவணனிடம் அசோகவனம் அழிந்ததைச் சொல்ல ஓடினர். அச்சத்தால் உடையிலேயே சிறுநீர் வழித்தவாறு ஓடினர் என்கிறார் கம்பர்.

ஒரு குரங்கு சோலையுள் புகுந்து, மலை போன்ற தோள்களால் அசோகவனத்தை நாசமாக்கியது என்றால் நம்ப முடியவில்லை தசமுகனுக்கு அரக்கர் வீரம் அருமை தான். ஒரு குரங்கு அசோகவனத்தை அழித்ததா? மூடரும் இதை நம்பமாட்டார்களே! என்று சிரித்தான். சோலைக் காவலரான பருவதேவர்கள் "அனுமன் செய்த பேரழிவை வந்து காண்க" என்றனர் இராவணனிடம் . அனுமனின் ஆரவாரம் எட்டுத் திசைகளிலும் எதிரொலித்தது.

## கிங்கரர் வதைப் படலம் (61 பாடல்கள்)

இராவணன், கிங்கரர் தமை அழைத்து அக்குரங்கைக் கொன்று விடாமல் பற்றிக் கொண்டு வருக" என்று ஆணையிட்டான்.

"கட்டிய வாளர்; இட்ட கவசத்தர்; கழலர்; திக்கைத்
தட்டிய தோளர்; மேகம் தடவிய கையர்; வானை
எட்டிய முடியர்; தாளால் இடறிய பொருப்பர்; ஈட்டிக்
கொட்டிய பேரி என்ன, மழை என, குமுறும் சொல்லார்;" (பா 759)

பிறை போன்ற பற்கள் உடையவர் கோபம் நிறைந்தவர்கள். 'குளிர்ச்சி நிறைந்த அசோகவனத்தை ஒரு குரங்கு அழித்த தாம் அரக்கரின் வீரம் அழிகிறது' எனக் கொதித்தெழுந்தனர். முரசொலி, வில்லின் நாணொலி, வீரக்கழலின்ஒலி, சங்கொலி, படையின் ஆரவார ஒலி எல்லாம் கடல் ஒலியைக் கூட அடக்கிவிட்டது. மலை போன்ற அரக்கர்கள், பல வகைப் படைக்கலப் பயிற்சி பெற்றவர் அசோகவனம் நோக்கி வீறுநடை போட்டு வந்தனர். அரக்கர்களின் கண்களிலிருந்து தீப்பொறிகள் பறந்தன. பிரளயக் காலத்தே தோன்றும் பெருங்காற்று வீசியது. விண்ணைத் தொடும் கயிலை மலை போல் அனுமன் நின்றான். ஊதுகொம்பு, முரசு இவற்றின் பெரு முழக்கத்துடன் அரக்க வீரர்கள் வருவதைக் கண்டான். அறிஞரில் அறிஞனான அனுமன் இதை எதிர்பார்த்துத் தானே, அசோகவனத்தை அழித்தான். மகிழ்ச்சியுடன் படைகளை எதிர்நோக்கினான்.

## இவன் தான்! இவன் தான்

அரக்கப் படை இதோ இவன் தான் அக்குரங்கு எனக் கத்தினர். அறமே வடிவான அனுமன், சிறு நகையுடன் ஒரு மரத்தை ஒரு கையில் எடுத்துக்கொண்டான். அந்த மரம் ஒன்றினால் இடி போல் தாக்க அரக்கர்கள் பலர் தலை உடைந்து, நிலத்தில் விழுந்து இறந்தனர்! பதிலுக்கு அரக்கர்களும் படைக் கருவிகளை எறிந்தனர். அனுமனது தாக்குதலால் கருநிறத்து அரக்கர்களுக்கு மார்புகள் நொறுங்கின. தோள்களை இழந்தனர். உடல் சிதைந்து கடலில் விழுந்தனர். அனுமனின் கால் உதையால் சிலர் இறந்தனர். கை அடிகளால் பலரும் மாண்டனர். தோள் வலியால், குத்துக்களால் பலரும் இறந்தனர். இழுக்கப்பட்டு இறந்தனர் பலர், தூக்கி எறியப்பட்டு உயிர்விட்டனர் பலர்.

அடிவாங்கி இறந்தவர் பலர். அச்சத்தில் உயிர் நீத்தவர் பலர். போர் என்பது ஒன்று தான். அதை விவரிக்கின்ற திறத்தில் கவிஞர் வேறுபடுகின்றனர். இத்தனை வகைகள் நடந்தாலும் கம்பன் வர்ணனையில் சுவை குறையவில்லை.

## கற்பனை அற்புதம்

அரக்கர்களைக் கையால் ஒரு சேரக் கட்டி, மரத்தின் மீது அனுமன் எறிந்தான். அவர்கள் ஆலையிலிட்ட கரும்பானார்கள். அவர்களது குருதி கருப்பஞ்சாறு போல ஓடிக்கடலில் கலந்தது. அரக்கர் உடல்களை அனுமன் வீசிய வேகத்தால், யானைகள் மடிந்தன. அந்த நேரத்திலும் கருணை காட்டினான் காற்றின் மகன். சில பெண்கள், புதிதாக மணமான தம்பதிகள் இவர்களை வீட்டுக்குப் போகலாம் என விடை தந்து அனுப்பினான். யமன் தன் தொழிலைச் செய்ய முடியாமல் திணறினான் என்கிறார் கம்பர்! சில அரக்கர்கள் கோபம் அதிகம் கொண்டு, போர் வெறி மூண்டு ஆரவாரத்துடன் அனுமன் மீது பாய்ந்தனர்! அனுமன் விடுவானா அரக்கர் கடல் போலவும், அதைக் கடையும் மத்தாக அனுமனும் விளங்கினர் அரக்கர்கள் யானைகள் ஒத்தனர் மாருதி சிங்கம் ஆனான்.

## அனுமன் புண்பட்டான்

அனுமனது பரந்த தோள்களில் பல புண்கள் ஏற்பட்டன. அவனது போர்த் திறத்தைக் கண்ட தேவர்கள் ஆரவாரம் செய்து மலர் மாரி சொரிந்தனர். மிக இயல்பாக அனுமன் வலசாரி, இடசாரியாகக் குதித்து அரக்கரை அழித்தான். ஒரு அரக்கன் கூடப் புறமுதுகு காட்டி ஓடவில்லை என்று கம்பன் பாடுகிறான். கிங்கரர் அனைவரும் மடிந்து விட்டனர். நந்தவனக் காவலர் அஞ்சி, விதிர்விதிர்த்து இராவணன் முன் நின்றனர். அவர்கள் நின்ற நிலையே தனக்கு வந்த தோல்வி நிலையைச் சொல்லி விட, இராவணன் உணர்ந்தான். பத்து வாயிலிருந்தும் கோபத் தீ கக்க "என்ன? கிங்கரர் அனைவரும் இறந்தொழிந்தனரா? போரை விட்டு நீங்கி ஓடினரா? நடந்தது என்ன" என்றான்.

"போருக்கு அஞ்சுபவர்களா நமது கிங்கரர்கள்! ஓடவில்லை ஐயா! பொய் சாட்சி சொல்பவன் குலம் வேரொடு அழிவது போல, அனைவரும் அக்குரங்கால் இறந்து போயினர்!" என்று பதில் சொன்னார்கள். 'உண்மையா! நீங்கள் கண்ணால் பார்த்தீர்களா! எனத் தசமுகன் இடிந்து போய்க் கேட்டான்! "மரத்தால் அடித்தே கொன்றது குரங்கு'. அங்கேயே உட்கார்ந்திருக்கிறது! வந்து பாருங்கள்! என்றனர். இதற்கு மேல் தசமுகன் பேச என்ன இருக்கிறது!

**நாம் அனுமனது வீரம் குறித்து மேலும் பேசுவோம்**

# சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

பகுதி – 4

## இராவணன் நெடுமுடியுடைய அரக்கர் கோமான்!



திருமதி மு. சுப்புலட்சுமி,
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com, www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

எண்மரின் ஆணவம் அடக்கிய சிவபெருமானுடைய வீரச்செயலுக்குத் தனிப்பெருமையும், அந்நிகழ்வுகள் அரங்கேறிய வீரட்டானத் தலங்களுக்குப் பெருஞ்சிறப்பும் தந்து வழிபடுவது தமிழர் பத்திமை மரபுகளுள் ஒன்று.

அவர், திருக்கண்டியூரில் பிரம்மனின் முகங்களுள் ஒன்றைக் கொய்து நான்முகனாக்கினார்; திருக்கோவலூரில் அந்தகாசுரனை மிதித்துத் தள்ளி, சூலம் பாய்ச்சிக் கொன்றார்; திருவதிகையில் திரிபுராந்தகர்களைப் போரில் வென்று முப்புரங்களையும் எரித்தார்; திருப்பறியலூரில் தட்சனின் தலையைக் கொய்தழித்தார்; திருவிற்குடியில் சலந்தரன் தலைவெடித்துச் சிதறச் செய்தார்; திருவழுவூரில் தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய யானையைக் கொன்றும் தோலுரித்தும், குருதி தோய்ந்த ஈரமுலராத அத்தோல் போர்த்தாடினார்; திருக்குறுக்கையில் காமனைச் சாம்பலாக்கினார்; திருக்கடவூரில் வெகுண்டெழுந்து, காலனை உதைத்துச் சாய்த்தார்.

செருக்கைப் பொறாத கடுஞ்சினமும் செருக்குற்றோரை அழிக்கும் பேராற்றலும் கொண்ட இறைவனின் இவ்வடிவங்களுக்கு

நாயன்மார் சொல்லுருவம் தர, அதனைக் கல்லுருவாகச் சிற்பக் கலைஞர்கள் மெருகேற்றிப் படைத்தனர். பதிகங்களைப் பாடிப் பரவுவோர் குறைந்துவரும் இன்றைய சூழலில், பதிகங்களையொற்றிச் செதுக்கப்பட்ட சிவனாரின் உளியோவியங்களால் இன்றுவரை நிலைத்துநிற்கிறது அவருடைய ஆற்றலின் பேரொளி.

சிவனுடைய கோபத்துக்காளாகி மாய்ந்தோருக்கிடையில், இறைவனின் கயிலை மலையை அசைத்துப் பார்த்த இராவணனுக்குக் கிடைத்ததோ பேரின்பமிகு இறையருளென்றால் அது வியப்பான ஒன்றுதானே? தம்மிருப்பிடமான கயிலையில் உமையுடன் சிவன் அமர்ந்திருக்க, அம்மலையசைத்து உமையை நடுங்கச் செய்த இலங்கை மன்னன் இராவணனை, சிறிதே துன்பப்படவைத்துப் பெரிதாக அருளிய தனிப்பெருஞ்செயல், அப்பரைப் பெரிதும் பாதித்திருக்கவேண்டும். அதனால்தான், இராவணன் வாழ்வோடு தொடர்புடைய சைவச்சிறப்பு நிகழ்வுகளைத் திருநாவுக்கரசர் தம் பாடல்களில் வழங்கியுள்ளதைப்போல் வேறெந்த நாயன்மாரும் அளிக்கவில்லை.

கயிலை மலையை எடுக்க முயன்ற இராவணன் செயலைத் தமிழிலக்கியங்களில் முதன்முதலில் உரைப்பது கலித்தொகையே.

இமைய வில்வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமையமர்ந்து உயர்மலை இருந்தனன் ஆக,
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுத்து, அம்மலை
எடுக்கல் செல்லாது உழப்பவன் உழப்பவன் போல (15)

(கபிலர், குறிஞ்சிக்கலி, கலித்தொகை 38)

மேருவை வில்லாகவும் கங்கையைத் தலைமுடியிலும் வைத்த சிவபெருமான், உமையுடன் உயர்ந்த மலையில் அமர்ந்திருக்க, தலைகள் பத்துடைய அரக்கர் கோமான் பொலிவுடைய வளையணிந்த பெரிய கையை, மலையின்கீழ்ப் புகுத்தி எடுக்கமுயன்று முடியாமல் போராடியதாகச் சொல்கிறார் கபிலர்.


இராவணன், முக்தேசுவரம்

“இராவணன் யார், அவர் ஏன் கயிலைமலையை அகற்ற முயன்றார், அம்முயற்சியின் விளைவுகள் எப்படியிருந்தன என்ற கேள்விகளுக்கெல்லாம் கலித்தொகையில் விடையில்லை. தேவாரமூவரில் காலத்தால் மூத்த அப்பர் பெருமானும் சம்பந்தருமே தங்கள் பதிகங்களில் இவ்வினாக்களுக்கான விரிவான விளக்கங்களைத் தருகின்றனர். என்றாலும், சம்பந்தரினும் அப்பர் பெருந்தகையே கயிலை அசைத்த இராவண வாழ்க்கையைப் படக்காட்சிகளெனப் புலப்படுத்தி மகிழ்கிறார்” என்ற டாக்டர் இரா. கலைக்கோவனின் கட்டுரை வரிகள் (டாக்டர் இரா. கலைக்கோவன், இராவணப் பதிவுகள்), அப்பர் குறிக்கும் இராவணனைத் தேடிச் செல்ல வைத்தன.

சொல்ல வருவனவற்றைக் கோவையாக, முறையாக வரிசைப்படுத்தி, தெளிவாகக் குறிப்பெடுக்கும் வண்ணம் தம் பதிகங்களை அருளுவது அப்பருடைய தனிச்சிறப்பு. இந்தத் தெளிவான சுட்டலே நம் தேடலை எளிதாக்கிவிடுகிறது. சிவனின் வீரச்செயல்களையும் திருவுரு வடிவங்களையும் ஆங்காங்கே தெளித்துச் சென்றாலும், திருவாரூர் திருப்பதிகத்தில் (6.034) இறைவனின் பல்வேறு திருச்செயல்களை வரிசையாக அளிக்கிறார் அவர்.

காலனைக் காய்ந்ததும், காமனைக் கண்ணழலால் விழித்ததும், அலைகடல் நஞ்சுண்டதும், சிலையால் (வில்) முப்புரமெரித்ததும், பார்த்தனது பலத்தைக் காண வேடனாய் வில்வாங்கி எய்ததும், தில்லையம்பலத்தே கூத்தாடியதும், தக்கன் பெருவேள்வி தகர்த்ததும், நீர்த்தாமரையானும் நெடுமாலும் ஏத்தியதும், தாருகாவனத்து முனிவர் மயக்கந்தீர்த்து அருள்செய்ததும், பிரமன் தலைகையேந்திப் பிச்சையேற்றுண்டுழன்றதும், வாசுகியால் வெளிப்பட்ட விடத்தை உண்டதும், சலந்தரனைக் கொன்றதும், பாதத்தால் முயலகனைப் பாதுகாத்து வைத்ததும், இராவணனின் வலிமையை அழித்ததும், மதயானையுரிபோர்த்து மகிழ்ந்ததும், மலர்மாலையைச் சண்டிக்குக் கொடுத்ததும்ஞ் அப்பப்பா! இந்த ஒற்றைப் பதிகத்தைப் படிக்கப் படிக்கச் சிவபெருமானின் எழில்நிறை எழுச் சிமிகு பேருரு படிப்போர் கண்முன் எழுந்துவிடும். 'இத்தனைச் செயல்களால் தேசமுன்னை அறிவதற்கு முன்னோ பின்னோ நீ திருவாரூரைக் கோயிலாகக் கொண்டாய்?,' என்று இறைவனிடம் குழைவுடன் வினவுகிறார் அப்பர்.

இப்படி, அப்பர் பதிகங்களில் இறைவனால் அடக்கப்பெற்றோரும் அருளப்பெற்றோரும் இடம்பெற்றாலும், இராவணனுடைய சிறப்பிடத்தை வேறெவரும் பெறவில்லை. சிவனின் பெருமையை நாட்டுமக்கள் அறிவதே பதிகங்களின் தலையாய நோக்கம். அப்படியிருக்க, இராவணனின் பெருவலியைப் பெரிதாகப் போற்றிப் பாராட்டி, அத்தகையோனைக் கால்விரலால் அடக்கிய இறைவன் என்று இறையாற்றலைக் குறிக்கிறார் நாவுக்கரசர். இராவணன் என்ற ஆளுமையின்பால் அப்பரின் ஈர்ப்பு நம்மைச் சிந்திக்கத் தூண்டுகிறது.

நான்காம் திருமுறையின் திருக்கயிலாயம் (4.047) மற்றும் திருமறைக்காட்டுப் பதிகங்களின் (4.034) பாடல் ஒவ்வொன்றும், இராவணன் கயிலைமலையை எடுக்கமுயன்ற கலித்தொகைச் செய்தியைத் திரும்பத் திரும்ப இயம்புகின்றன. அதுபோக, ஏனைய பதிகங்களின் இறுதிப் பாடலை இராவணனுக்காய் ஒதுக்கியிருக்கும் அப்பர், தென்னிலங்கை மன்னன் சார்ந்த குறுங்காட்சிகளை அவற்றில் படைத்தளிக்கிறார். அக்குறுங்காட்சிகளை இணைத்துப் பார்க்கையில், சுருங்கக் கண்ட கலித்தொகைச் செய்தி மெள்ள மெள்ள விரிய, இராவணன் குறித்த பற்பலச் செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன.

இராவணக் காட்சியில் அப்பரைப் பாதித்த மற்றொன்று, உமையின் அச்சம். திருக்கயிலாயப் பதிகத்தில், கயிலையைப் பெயர்க்கமுயலும் இராவணனின் செயலால் உமையாளஞ்ச, அரிவைதானஞ்ச, மங்கையஞ்ச, மங்கை வெருவ, நேரிழையஞ்ச, ஏந்திழையஞ்ச, சேயிழையஞ்ச என்று பலவாறாகக் குறிக்கிறார்.

சிவனாருக்கும் இராவணனைச் சினத்துடன் பின்னெழாது அழிக்கும் வேகமோ நோக்கமோ இருந்ததாகத் தெரியவில்லை. அதையும் அப்பரே

நமக்குரைக்கிறார். திருக்கயிலாயப் பதிகத்தின் இரண்டு பாடல்களில், கண்சிவந்து கயிலையைக் கையால் அவனெடுக்க, உமையஞ்ச, வானவரிறைவனோ சிறிதே நகைக்கிறார்; கைநொடிப்பொழுதில் விரலையூன்றியழுத்துகிறார்; பெரியமலைபோல் இராவணன் வீழ்கிறான். போகிறபோக்கில் மலையசைத்து ஆணவம் காட்டியமைக்கு, இறைவன் குறுநகைபுரிந்தது வேறுபட்ட உணர்வல்லவா? சிறுநகையோடு நிற்கவில்லை சிவன். பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும், இன்னும் அழுத்தமாக அவர் ஊன்றியிருந்தால், இராவணன் மீண்டும் கண்விழித்திருக்கவே இயன்றிராது (‘மறித்திறை யூன்றினானேன் மறித்துநோக் கில்லையன்றே’) என்கிறார் வாகீசர்.

தண்டிப்பதென்று முடிவாகிவிட்டது; பரந்த தோள்களும் பத்துத் தலைகளும் நெரிய வாய்விட்டலறி அவன் வீழ்ந்திட, கால்விரலையும் அழுத்தியாகிவிட்டது; ஆயினும், நிலைதடுமாறி அலறிவிழுபவன் மீண்டும் எழும்வகையில் அழுத்தியது ஏனோ? அரக்கர் கோமான் என்று அப்பர் சிறப்புடன் விளிக்கும் இராவணன், அழிவே தண்டனையாகப் பெற்ற பிற அசுரர்களுடன் ஒப்புநோக்கக்கூடியவர் அல்லர் என்பதையுணர்த்தவே எதிர்வினையாற்றிய இறைவனும், அதையுணர்ந்து பதிகம்பாடிய நாவுக்கரசரும் இராவணனை நீடுபுகழ் விளங்கச் செய்திருக்கிறார்கள்போலும்.

## அரக்கர் கோமான்

பதிகங்களின் இறுதிப்பாடலை இராவணனுக்கென்று தந்து, கயிலை மலையசைத்ததற்கு முன்னும் பின்னும் நடந்த நிகழ்வுகளை உலகறியச் செய்கிறார் அப்பர். சுருக்கமான அறிமுகமாக ‘அரக்கன்’ என்று முதலில் அழைப்பவர் (அரக்கனாற்ற லழித்தவன்), அடுத்தநிலையில் ‘அரக்கனார்’ என்று



இராவணன், மதங்கீசுவரம்

குறிப்பிடுகிறார் (அரக்கனார்தலை பத்துமழிதர); சற்று நேரத்திற்கெல்லாம், ‘முடியுடை அரக்கர் கோன்’ என்றும் ‘வேந்தன் நெடுமுடியுடைய அரக்கர் கோமான்’ என்றும் சிறப்புப் பெயர்களைத் தந்துவிடுகிறார். இப்பெயர்க் குறிப்புகளோடு நின்றுவிடவில்லை நாவுக்கரசர்.

‘ஆரையும் தனக்கு மேலுணராத ஆண்மையான்’, ‘ஆண்மையான் மிக்க அரக்கன்’, என்று இராவணன் செருக்கைச் சொல்லி வலிமையை மெச்சுவதையும் காணமுடிகிறது. தன் தேரைச் செலுத்துகையில் கயிலைமலை ‘தடுக்கவுந் தாங்க வொண்ணாத் தன்வலியுடையனாகி’, “இது என்ன பண்டம்? கையிருபதுகளாலும் எடுப்பேன்யான்,” என்று கேட்பதாகக் காட்சியை மேலும் சுவைபட விளக்குகிறார்.

## புட்பகத் தேருடையான்

‘புட்பகத் தேருடையானை யடரவூன்றி ஒறுத்துகந்தருள்கள் செய்தார் ஒற்றியூருடைய கோவே’ (4.45.10), என்று இராவணன் புட்பகத் தேருடையான் என்று அறிமுகப்படுத்துகிறார். அவனுக்குப்

புட்பகத்தேர் கிட்டியது எப்படி என்பது அடுத்து எழக்கூடிய வினா. ‘பொருண்மன்னனைப் பற்றிப் புட்பகங்கொண்ட மருண்மன்னன்’ (4.17.11) என்று விடையுமளிக்கிறார். பொருள் மன்னனான குபேரனைப் பிடித்துக் கைப்பற்றிய புட்பகத்தேர் அது.

இந்த இரு பாடல்களுள் சிவபெருமான், ஒன்றில் தேருடைய இராவணனைக் காலையூன்றித் தண்டித்து, பின் உகந்தருள் செய்கிறார்; மற்றொன்றில், வருத்தியபின் வாளையீந்து அருள்மன்னுகிறார்.

## கயிலைக் காட்சி

கடுகிய தேர்செலாது கயிலாயமீது கருதேலுன்வீர மொழிநீ

முடுகுவ தன்றுதன்ம மெனநின்றுபாகன் மொழிவானைநன்று முனியா

விடுவிடு வென்றுசென்று விரைவுற்றரக்கன் வரையுற்றெடுக்க முடிதோள்

நெடுநெடு விற்றுவீழ விரலுற்றபாத நினைவுற்றதென்றன் மனனே (4.14.11)

இங்கு, கயிலைக் காட்சி கைசொடுக்கும் நேரத்துள் நடந்தேறுவதுபோலப் பாடலமைக்கிறார் அப்பர். விரைந்து செல்லும் தேர், கயிலை மலைமீது செல்லாதென்று எடுத்துரைக்கும் தேர்ப்பாகனின் மொழிகேளாமல் இராவணன், ‘விடுவிடுவென்று சென்று’ மலையைப் பெயர்க்க, இறைவன் விரலூன்ற, ‘முடிதோள்கள் நெடுநெடுவென’ இற்றுவீழ்ந்தனவாம்.

இறைவன் தன் கால்விரலையழுத்த, மலையைத் தூக்கமுயன்ற தோளாற்றலும் வாளாற்றலுமுடைய அரக்கனின் கைகள் நெரிந்தன; கண்களில் நீர்த்துளிகள் பொடிக்க அவன் துடிதுடித்தான் (5.032.10). தன் மார்பில் பால்வெண்ணீற்றுச் சாந்தணிந்த சிவபெருமான், வாளரக்கனின் கண்ணில் குருதிவழியச் செஞ்சாந்தணிவித்தமையும் குறிக்கப்படுகிறது (4.019.11).

மற்றுமொரு பாடலில், மூர்த்திதன் மலையின்மீது தேர் செல்லாதென்று சொன்ன தேரோட்டியை வெகுண்டுநோக்கிய இராவணன், தேரிலிருந்து பூமியில் குதித்து கயிலையைப் பெயர்க்கமுயன்று ஆரவாரம் செய்தபோது, தலைகள் பத்தையும் விரலால் இறைவன் நசுக்கிட, வருந்திய அவன் ‘தேத்தெத்தாவென’ இசைபாட (4.32.10) அதை அவர் கேட்டு மகிழ்ந்தாராம்.

## வாளரக்கன் இசையும் பரிசாகப் பெற்ற வாளும்

கயிலைமலை அவனை நெருக்குமாறு தம் திருவிரலை அழுத்திய ஈசன், வலிமையான தோள்களுடைய வாளரக்கனைத் தண்டித்து ஒடுக்குகிறார். வலியால் துடித்தலறியவன், இறைவனின் இசைநாட்டத்தைப் புரிந்துகொண்டு தன் கை நரம்புகளையே வீணை இழைகளாகக் கொண்டு இருக்கு வேதத்துடன் இசைப்பாடல்களும் இசைத்திட, அவரும் பெருவிருப்புடன் திளைத்திருந்தார் (புரிந்து கைந்நரம்போடிசை பாடலும் பரிந்தனைப் பணிவார் வினை பாறுமே 5.34.10).

அடுத்த காட்சியாக நாவுக்கரசர் காட்டுவது, இராவணன் வாள் பெறும் நிகழ்வை. அங்கும், மின்னல் போன்ற ஒளிவீசும் வெண்பற்களையுடைய இராவணன் என்று உவமைகொண்டு அவனைப் போற்றாமல் அவர் தொடர்வாரில்லை.

........................ மீண் டவன்றன் வாயில்

இன்னிசைகேட் டிலங்கொளிவா ளீந்தோன் கச்சி

ஏகம்பன் காண்அவன்என் எண்ணத் தானே (6.065.10)

விரலால் மலையை அழுத்தியதன்பின், அவன் வாயால் பாடிய இன்னிசை கேட்டு, ஒளிபொருந்திய வாளினை ஈந்தான் கச்சி ஏகம்பன். அந்த வாள் எப்படிப்பட்டது? ‘கூன்றிகழ் வாளரக்கன்’ என்று சுட்டுகிறார்

அப்பர். சிவனிடமிருந்து இராவணன் பெற்றது வளைந்த வடிவிலான வாளாம்.

## இராவணன் என்று பெயர் சூட்டல்

பராபரனென் பதுதமது பேராக் கொண்டார்
பருப்பதங் கைக்கொண்டார் பயங்கள் பண்ணி
இராவணனென் றவனைப்பேர் இயம்பக் கொண்டார்
(6.96.11)

பராபரன் என்பதைத் தம்பெயராகக் கொண்டவரும், மேருமலையை வில்லாகக் கொண்டவருமான சிவனார், பலவாறாக அச்சமேற்படுத்தி அரக்கர் கோனை அலறச் செய்தார். பலத்த குரலெலுப்பி அலறுபவனுக்கு வடமொழியில் 'இராவணன்' என்று பெயர். இதைக்கொண்டே, 'பயங்கள் பண்ணி இராவணன் என்று அவன் பெயர் பெறுமாறு செய்தார்', என்று அப்பர் தெளிவுபடுத்துகிறார்.

தம்மை ஈர்த்த இராவணனெனும் ஆளுமையையும் அவன் வாழ்வின் சைவப்பெருநிகழ்வையும் சொற்களால் விரிவாகக் காட்சிப்படுத்திய அப்பர், வாளரக்கனின் சிவனருளால் தாம் கற்றுக்கொண்டதைப் பகிரவும் தவறவில்லை.

இறவாமே வரம்பெற்றே னென்று மிக்க
இராவணனை யிருபதுதோள் நெரிய வூன்றி
உறவாகி யின்னிசைகேட் டிரங்கி மீண்டே
யுற்றபிணி தவிர்த்தருள வல்லான் தன்னை
(6.20.10)

சாகாவரம் பெற்றதனால் செருக்குற்ற இராவணனின் தோள்கள் இருபதும் நொறுங்குமாறு திருவடி விரலால் ஊன்றிய இறைவன், பின்னர் அவன் ஆணவம் தணிந்து உறவாகி வழங்கிய 'இன்னிசை கேட்டிரங்கி அவனுற்ற பிணி தவிர்த்தருள வல்லான்', என்கிறார். பெருந்தவறிழைத்தபோதும், செய்த தவறுணர்ந்து திருந்துவோரையும், இசையால் அவனைத் துதிப்போரையும் காக்கும் தன்மையுடையவர் சிவபெருமான் என்பதை உலகோரறியச் செய்கிறார் அவர்.

இறைவனையே சீண்டி, பின் அருளப்பெற்று நாவுக்கரசர் மனதில் சிறப்பிடம் பிடித்த இராவணன், அவருடைய பாடல்களின் தாக்கத்தால் தமிழகக் கோயில்களிலும் பெரியதோரிடம் பெற்றுவிடுகிறார்.

ஏழாம் நூற்றாண்டுத் தமிழகப் பத்திமையரங்கில், இராவணன் என்ற வல்லோனின் சிவத்தொடர்பை விளக்கிய அப்பரின் அறிமுகத்தால்தான் இன்றும் இராவணக் காட்சி தொடர்ந்து பேசப்பட்டுவருகிறது. அவர் பாடல்கள் வெளிப்படுத்திய இராவணனின் கயிலைக் காட்சியும் இறைவனின் அருட்செயலும் அன்றைய மக்கள் மனதில் பதிந்ததோடு, தமிழகத்தைத் தொடர்ந்தாண்ட மன்னர்களையும் கவர்ந்தது.

வாகீசரால் சைவந்தழுவிய மகேந்திரவர்மர், கோயில் கட்டடக்கலையில் புதுமைகள் படைத்தார்; இரண்டாம் நரசிம்மரான இராஜசிம்மரோ, அப்பர் காட்டிய இராவணனுக்குக் கோயில்களில் நிலைபெற்று விளங்கும் அழகுருவை அளித்தார். இராஜசிம்மரின் காஞ்சிக் கற்றளிகளான கயிலாசநாதர், முக்தேசுவரம், மதங்கீசுவரம் ஆகியவற்றில், கயிலையில் உமையுடன் அமர்ந்துள்ள இறைவன், மலையை அசைக்கமுயலும் பத்துத்தலைகளுடைய இராவணனைத் தன் கால்விரலையழுத்தி அடக்கும் காட்சி சுவைபட அமைக்கப்பட்டுள்ளது. சிவனையும் உமையையும் காட்டிலும் கண்கவர் பேருருவாக இராவணன் வடிக்கப்பட்டிருப்பது அக்காட்சியின் வீச்சை நமக்குணர்த்தும். இந்நிகழ்வின் நீட்சியான, நரம்பை வீணையிழையாக்கி இசைக்கும் இராவணச் சிற்பத்தை முக்தேசுவரம்

காட்டுகிறது.

தம் தஞ்சைப் பெருவுடையார் கோயில் ஓவியங்களில் இடம்பெறுமாறு பேரரசர் இராஜராஜர் தேர்ந்தெடுத்த இறைச்செயல்களுள் இராவணனுக்கு அருளலும் இடம்பெற்றுள்ளமை, நூற்றாண்டுகள் கடந்தும் கவர்ந்திழுத்த அக்காட்சியின் தன்மையை உணர்த்தும். கடல்கடந்த கம்போடியாவில், ஆடவல்லானின் அடிக்கீழிருக்குமாறு அமைக்கப்பெற்ற காரைக்கால் அம்மையின் சிற்பம் அமைந்துள்ள ‘பந்தாய் சிரி’ கோயிலிலும், மனதை மயக்கும் இராவணக்காட்சி வடிக்கப்பட்டிருப்பது இங்கு கூடுதல் செய்தி.



இராவணன், பந்தாய் சிரி, கம்போடியா

முன்னரே கூறியதுபோல, பதிகங்களையொற்றிச் செதுக்கப்பட்ட சிவனாரின் உளியோவியங்களால் இன்றுவரை நிலைத்துநிற்கிறது அவருடைய ஆற்றலின் பேரொளி.

ஆயிரமாயிரமாண்டுகள் கழித்தும் கண்விரிய வியப்பிலாழ்த்தும் ‘இராவணனுக்கருளியமூர்த்தி’யின் சிற்பவடிவை உருவாக்கி, சிவனருள் பெற்ற இராவணனுக்குத் தமிழ்மண்ணில் நிலைபேறு வழங்கிய பெருமை இராஜசிம்மருக்கெனில், இத்தனைச் செய்திகளைத் தம் பதிகங்களில் வழங்கி அவரையூக்கிய தனிப்பெருமை அப்பருடையது.

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.

### துணைநூல்கள்

1. டாக்டர் இரா. கலைக்கோவன், இராவணப் பதிவுகள்

2. திருநாவுக்கரசர் தேவாரம், திருமுறைகள் 4,5,6

## திருமந்திரம்

இதுபணிந் தெண்டிசை மண்டலம் எல்லாம்
அதுபணி செய்கின் றவளொரு கூறன்
இதுபணி மானுடர் செய்பணி யீசன்
பதிபணி செய்வது பத்திமை காணே.

**விளக்கம்:**

மேல் ஓதிய முறைமைகளை வணங்கி ஏற்றுக்கொண்டு, எட்டுத் திசைகளால் சூழப்பெறும். உலகு உடல் பொருள்கள் நிறை மண்டலங்களையெல்லாம் படைத்து அளித்து அழித்து மறைத்தருள் செய்யும் ஐந்தொழிலுடைய அம்மையை ஒரு கூற்றிலே உடையவன் சிவன். மாந்தர் செய்யத்தகுந்த இறைபணி சிவப்பணியேயாம். இச் சிவப்பணியே நோன்பாளராகிய தொண்டு நெறியினர் செய்யும் சிவபத்தித் திருப்பணியாகும்.

# இருண்ட காலமா?

பகுதி–2



**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

சேந்தன் எனும் மன்னருடையதாகக் கொள்ளப்படும் மற்றொரு கல்வெட்டு, சிதைந்திருந்தபோதும் பிரமதேயம் பற்றிய சில முதன்மைத் தகவல்களைத் தருகிறது. இக்கல்வெட்டிலும் வேள்மருகன் மகன் கடலகப் பெரும்படைத்தலைவன், வெள்ளேற்றான்மங்கலத்துக் கிழவரால் அளிக்கப்பட்ட சில நன்செய், புன்செய் நிலத்துண்டுகளைப் பெற்றவராகவும் சிற்றையூர்க் கடையவயலில் சில புன்செய் நிலத்துண்டுகளை விலைக்குப் பெற்றவராகவும் குறிக்கப்படுகிறார். இந்நிலத்துண்டுகள் கூடலூருநாட்டு பிரமதேயமான சிற்றையூர்க் கிழவர்களின் காராண்கிழமை, மீயாட்சி உரிமைக்கு உட்பட்டிருந்தவை.

பாண்டிநாட்டிலும் கொங்குநாட்டிலும் இருந்த தெய்வத்தின் காராண்கிழமை, கலக்கிழமை, மேலாண்மை உடைமைகள், காலாசம் (கால்நடைகள்), தோட்டங்கள், தமர், குடிகள் ஆகிய அனைத்தும் உடையார், பிரமதேயக் கிழவர், நாடுகாவலர், புறம்காவலர், கிராமகாவலர், தத்தமாண், நெறிஅறஞ் செய்தார் ஆகியோரால் காக்கப்படுவதாக என உரைக்கும் கல்வெட்டு, தம் கடமையில் தவறுவார் ஒவ்வொருவரிடமிருந்தும் 1600 காணம் அபராதம் தண்டப்படும் என்று கூறுவதோடு, இது அரசஆணை என்றும் சொல்கிறது. இந்த ஆணை உலவியப் பெருந்திணைகள் நல்லன்கிழான் எயினன்குமாண், கிழான் இளன்கூற்றன், ஆலத்தூர்க்கிழான் ஆகியோரால் கேட்கப்பட்டதாகவும் ஓலையெழுதியவன் தமன் வடுகன் குமாண் எனவும் தெரியவருகிறது.

இக்கல்வெட்டுகளை நன்கு ஆராய்ந்துள்ள பேராசிரியர் எ.சுப்பராயலு, 'அரசியலைப் பொறுத்தவரையில் சங்க கால அரசுக்கும் இக்கல்வெட்டுகள் காட்டும் அரசுக்கும் அமைப்பில் வேறுபாடுகள் உள்ளன. பின்னது சிலப்பதிகாரம், பெருங்கதை முதலிய காவியங்கள் காட்டும் அரசமைப்போடு பெரிதும் ஒப்புமை உடையதாகக் காண்கிறோம். தேவகுலம், தாபதப்பள்ளி, வாசிதேவனார் கோட்டம், பிரம்மச்சாரிகள், தருமிகள் முதலிய சொற்களும் சமய உலகில் வடக்கிலிருந்து வந்த தாக்கத்தை வெளிப்படுத்துகின்றன. பிரமதேயங்கள் பல்கத் தொடங்கிய காலம் இது என்பதை வெள்ளேற்றான்மங்கலம், சிற்றையூர் பிரமதேயம் முதலியன உணர்த்தும். இவற்றின் விளைவாக நில உரிமைகளில் வேறுபாடுகள் தோன்றத் தொடங்கிவிட்டன. நிலக்கிழார், உழுவோர் என்ற வேறுபாடுகளும் நிலக்கிழமை வேறு, உழும் உரிமை வேறு என்று சமுதாயத்தில்

ஏற்றத்தாழ்வுகளும் தெளிவாகத் தொடங்கிவிடுகின்றன. இங்கும் காப்பிய காலச் சமுதாயத்தை ஒப்பிட்டுப் பார்ப்பது சங்க மருவிய கால வரலாற்றுக்குப் புதிய விளக்கத்தைப் பெற உதவும்' என்று எழுதியுள்ளமை கருதத்தக்கது.

பொ. கா. 200க்கும் 400க்கும் இடைப்பட்ட காலத்தனவாகக் கிடைக்கும் தமிழ்பிராமி கல்வெட்டுகள் இதற்கு முற்பட்டனவான பொ. கா. 2ஆம் நூற்றாண்டுவரையிலான தமிழ்பிராமி கல்வெட்டுகளிலிருந்து எழுத்தமைப்பிலும் மெய்யெழுத்துக்கள் புள்ளிபெறும் நிலையிலும் மாறுபட்டுள்ளமை இருண்டகாலமாக ஒதுக்கப்பட்ட இக்காலத்தேநிகழ்ந்ததமிழ் எழுத்துக்களின் வளர்நிலையை உறுதிப்படுத்தும். தமிழ்பிராமி வடிவிலிருந்து தமிழ்க் கல்வெட்டுகள் வட்டெழுத்து வடிவிற்கு மாற்றம் பெறுவதும் இக்காலத்தில்தான். ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகள் (பொ. கா. 400600) வட்டெழுத்துக்களில் பொறிக்கப்பட்ட தமிழ்க் கல்வெட்டுகள், 6ஆம் நூற்றாண்டின் இறுதிக்காலத்தே தமிழ் எழுத்துக்களிலேயே வெளிப்பட்டமை வல்லம், கழுக்குன்றம், சிறுவாக்கம் கல்வெட்டுகளால் அறியப்படும். இக்கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ள பெரும்பாலான தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சியடைந்த நிலை, பின்னோக்குப் பார்வையில், குறைந்த அளவில் ஏறத்தாழ 50 ஆண்டுகளேனும் இத்தகு பயன்பாட்டில் தமிழ் நடைபோட்டிருக்க வேண்டும் என்பதை உணர்த்தும். இருண்டகாலமாக ஒதுக்கப்படும் மூன்று நூற்றாண்டுகளில் தமிழ்மொழி மூன்று வகையான வரிவடிவங்களைப் பெற்று (தமிழ்பிராமி, வட்டெழுத்து, தமிழ்) ஒன்றிலிருந்து ஒன்றிற்கு மாறியும் ஒன்றையொன்று தழுவியும் வளர்ந்துள்ளமை குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

இந்த இருண்டகாலத்தில் தமிழ்நாட்டின் பெரும்பகுதியைக் களப்பிரர்கள் கைப்பற்றி யிருந்ததாகவே கொண்டபோதும் அவர்தம் ஆட்சி இந்த மண்ணின் மொழிக்கு எவ்விதத்தானும் இடையூறாக இல்லை என்பது அவ்ஆட்சிக்காலத்தே இங்குப் பொறிக்கப்பட்டிருக்கும் 30க்கும் மேற்பட்ட தமிழ்க் கல்வெட்டுகளாலும் களப்பிரவேந்தர்களாகப் பேராசிரியர் சுப்பராயலுவால் சுட்டப்படும் சேந்தன், சேந்தன்கூற்றனின் கல்வெட்டுகளே தமிழ்மொழியில் அமைந்திருப்பதாலும் நன்கு விளங்கும்.

காசுகள்

சங்க காலம் போலவே சங்கம் மருவிய காலத்துக் காசுகளும் கிடைத்துள்ளன. அழகன்குளத்தில் தமிழ்நாட்டரசின் தொல்லியல்துறை நிகழ்த்திய அகழ்வாய்வின்போது சங்கம் மருவிய காலத்தைச் சேர்ந்த ரோமானியச் செப்புக்காசுகள் கிடைக்கப்பெற்றன. பொ. கா. 383423 வரையிலான ரோமப் பேரரசர்களான இரண்டாம் வேலன்டின், அர்க்காடியஸ், ஹொனோரியஸ், இரண்டாம் தியோடோசியஸ் காலக் காசுகளாக வெளிப்பட்டிருக்கும் இவை கொண்டு, அழகன்குளத்துக்கும் ரோமாபுரிக்கும் இடையிலிருந்த வணிகத்தொடர்பு நிறுவப்பட்டுள்ளது. காசியல் அறிஞர் திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி தமக்குக் கரூர், மதுரைப்பகுதிகளில் கிடைத்த ரோமானியக் காசுகள் 4ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து 5ஆம் நூற்றாண்டின் இறுதிவரையான காலத்தின என்று தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இக்காசுகள் ரோமாபுரியுடன் மதுரை, கொங்குப்பகுதிகள் தொடர்ந்து வணிகம் மேற்கொண்டிருந்தமையைத் தெளிவாக்குகின்றன. இதனால், களப்பிரர் காலமாகக் கருதப்படும் இருண்டகாலத்தில் வெளிநாடுகளுடனான வணிகம் செழித்திருந்தமை உணரப்படுவதோடு, அயலக அரசர்களான களப்பிரர்கள் தமிழ்நாட்டு வணிகத்திற்கு இடையூறாக இல்லை என்பதையும் அறியமுடிகிறது.

இலக்கியங்கள்

முருகாற்றுப்படை தவிர்த்த பிற ஒன்பது பாடல்களும் புறநானூறு, கலித்தொகை,

பரிபாடல் தவிர்த்த பிற தொகை நூல்களும் சங்க காலத்தின் மேல் எல்லையாகக் கொள்ளப்படும் பொ. கா. 250க்கு முற்பட்டவை என்பதில் தமிழ், வரலாற்று அறிஞர்களுக்கிடையே ஒத்திசைவு உள்ளது. எனில், முருகாற்றுப்படை, புறநானூறு, கலித்தொகை, பரிபாடல் ஆகிய நான்கு இலக்கியங்களும் எக்காலத்தன என்ற கேள்வி எழுகிறது. இந்நான்கனுள் புறநானூறும் கலித்தொகையும் சங்கச் சாயலில் தோய்ந்தவை. முருகாற்றுப்படையும் பரிபாடலும் 6ஆம் நூற்றாண்டில் எழுச்சியோடு வெளிப்பட்ட பத்திமை இலக்கியங்களின் முன்னோடிகளாகவும் அதே சமயம் சங்க இழையோட்டத்தில் வடிவமைக்கப்பட்ட இலக்கியங்களாகவும் காட்சிதருகின்றன.

பெரும்பாலான தமிழ், வரலாற்று அறிஞர்கள் இந்நான்கையும் சங்கம் மருவிய காலமாகக் கருதப்படும் பொ. கா. 250க்கும் 550க்கும் இடைப்பட்ட தொகுப்புகளாகவே கொள்கின்றனர். எனில், புறநானூற்றில் சுட்டப்படும் சேர, சோழ, பாண்டிய அரசர்களும் சிற்றரசர்களும் ஊர்த்தலைவர்களும் தமிழ்நாட்டில் வாழ்ந்த காலம் எதுவாக அமையமுடியும்? சங்க காலத்திலும் சங்கம் மருவிய காலத்திலும் தமிழ்நாட்டில் இவர்கள் தழைத்திருந்ததாகக் கொள்வதுதானே பொருந்தும். புறநானூற்றில் காட்சிப்படுத்தப்படும் ஊரகப்பண்பாடு கலித்தொகையிலும் பரவலாகக் கண்சிமிட்டுகிறது. சிலப்பதிகாரத்து ஆய்ச்சியர் குரவையில் கலித்தொகையின் சாயல் இருக்கிறது. பத்திமை இலக்கியங்களில் பேசப்படும் செய்திகளில் சில கலித்தொகையிலும் பரிபாடலிலும் வேர்பிடித்துள்ளன. உள்ளீடு கொண்டும் உணர்த்தப்படுவன கொண்டும் சங்கம் மருவிய கால இலக்கியங்களாக உறுதிப்படும் புறநானூறு, கலித்தொகை, முருகாற்றுப் படை, பரிபாடல் ஆகிய நான்கும் இருண்டகாலமாக ஒதுக்கப்பட்ட மூன்று நூற்றாண்டுக் கால அரசியல், சமுதாயம், பண்பாட்டுச் செய்திகளைத் தருவதோடு, அக்காலத்தே தமிழ்நாட்டில் நிகழ்ந்த களப்பிரர் பரவல் நாடு தழுவியதாக அமையவில்லை என்பதையும் உள்நாட்டுக் கலை, பண்பாட்டிற்கு இடையூறாக இருக்கவில்லை என்பதையும் உறுதிப்படுத்துவது காண்க.

பொ. கா. 67ஆம் நூற்றாண்டினவாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள அப்பர், சம்பந்தரின் ஆறு திருமுறைகளும் இருண்டகாலக் கலை, பண்பாட்டு வாழ்க்கையில் ஒளியேற்றும் சுடர்களாக உள்ளன. பத்திமைப் பார்வையை விலக்கி, இந்த ஆறு திருமுறைகளையும் சமுதாய நோக்கில் ஆராயும்போது அவை தோன்றிய காலத்தே தமிழ்நாட்டில் நிலவிய கலை, பண்பாட்டுக் கூறுகள் வெளிச்சம் பெறும்.

சில சான்றுகளைக் காண்போம். சங்க இலக்கியங்களில் பேசப்படும் இசைக்கருவிகளிலிருந்து பல்கிப் பெருகிய, மாறுபட்ட பல்வேறு தோல், காற்று, நரம்பு, கஞ்சக்கருவிகளைப் பத்திமை இலக்கியங்கள் கண்முன் வைக்கின்றன. சங்க காலத்தின் முதன்மை நரம்புக்கருவியான யாழ் பத்திமைக் காலத்தில் தொடர்ந்தபோதும் புதிய நரம்புக்கருவியாக வீணையையும் பார்க்கமுடிகிறது. ஐவகை நிலங்களிலும் பரவலாகப் பயன்படுத் தப்பட்ட பறை, துடி வழக்கில் குறைந்து, கரடிகை, இடக்கை, மொந்தை, கொடுகொட்டி, தக்கை, கல்லவடம், குடமுழவு எனப் புதிய தோல்கருவிகள் கையாளப்படுகின்றன. சங்கப் பாடல்களில் இடம்பெறாத பாணி, சதி (ஜதி) முதலிய தாளம் சார்ந்த சொற்கள் சம்பந்தரால் பயன்படுத்தப்பட்டுள்ளன. பாலை மழவர்களின் இசைக்கருவியான சங்கத் துடி சமயக் குறியீடாகச் சைவம் சார்ந்த கடவுளின் கைக்கு மாறுகிறது.

சங்க இலக்கியங்களில் கோயில், கடவுள், வழிபாட்டுமுறைகள் மிக எளிய நிலையில் காட்டப்படும் அமைப்பிலிருந்து மாறுபட்ட வளர்நிலைகளை முருகாற்றுப்படையிலும் பரிபாடலிலும் காணமுடிந்தாலும், பத்திமை இலக்கியங்கள் அவற்றின்

உச்சத்தைத் தொட்டுள்ளமை கண்கூடு. கலித்தொகையில் கண்காட்டும் தொன்மங்களும் பரிபாடலில் இடம்பெறும் சமயச் செய்திகளும் அப்பர், சம்பந்தர், முதல் ஆழ்வார் மூவர் பாடல்களில் முழுவீச்சில் விரிகின்றன. சான்றாக இராவணனுக்கு அருள்தந்த சிவபெருமானின் கதையைக் கொள்ளலாம். கலித்தொகையில் ஓரடியில் வெளிப்படும் இச்செய்தி அப்பரின் பெரும்பாலான பதிகங்களில் இடம்பிடித்துள்ளது. சம்பந்தராலும் இது போற்றப்பட்டு, இராவணன் வரலாறு தொடர்பான பல முதன்மைச் செய்திகள் முன்வைக்கப்படுகின்றன.

சைவம் சார்ந்த பல தொன்மங்கள் அப்பராலும் சம்பந்தராலும் முதன்முறையாக விதந்தோதப்படுவதைப் பார்க்கும்போது பொ. கா. 6ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 7ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் அச்சமயம் மிகப் பெரிய அளவில் சமுதாயத்தில் கிளைத்துப் பரவியிருந்ததை அறியலாம். வழிபாட்டுமுறைகளில் வளர்ச்சியும் ஆடலும் பாடலும் வழிபாடு சார்ந்து செழித்ததும் பத்திமை இலக்கியங்கள் காட்டும் உண்மைகளாகும். இவையெல்லாம் திடீரென நேர்ந்த மாற்றங்களன்று. களப்பிரர்கள் தமிழகத்தில் பரவியதாகக் கருதப்படும் மூன்று நூற்றாண்டுகளிலும் நாட்டின் பல்வேறு பகுதிகளில் படிப்படியாக வளர்ந்தே ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் அவை உச்சத்தை அடைந்திருக்கவேண்டும். இதை உறுதிப்படுத்துமாறு அப்பருக்கும் சம்பந்தருக்கும் காலத்தால் முற்பட்டுப் பல நாயன்மார்கள் தமிழ்நாட்டில் வாழ்ந்திருந்தமை அவ்விருவர் பதிகங்களால் வெளிப்படுதல் காண்க.

முதல் ஆழ்வார்கள் மூவராக வைணவப் பாரம்பரியத்தில் போற்றப்படும் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் விஷ்ணுவின் கைக்கருவிகளையும் அவரது வீரச்செயல்களையும் அவரால் அழிக்கப்பட்டவர்களையும் தங்கள் அந்தாதிப் பாசுரங்களில் விரிவாகச் சுட்டியுள்ளனர். உலகளந்த பெருமாளாக விஷ்ணு விண்ணோக்கி உயர்த்திய திருவடியை நான்முகன் கழுவித் தூய்மை செய்ததாகப் பூதத்தாழ்வார் குறிப்பிடும் காட்சி பொ. கா. 8ஆம் நூற்றாண்டினதான மாமல்லபுரத்து வராகர் குடைவரையில் சிற்பப் படப்பிடிப்பாகப் பதிவாகியுள்ளது. அது போலவே பேயாழ்வார் குறிப்பிடும் மது, கைடபர் கதை தமிழ்நாட்டில் பல்லவர், பாண்டியர், அதியர், முத்தரையர் குடைவரைகளில் பொ. கா. 8, 9ஆம் நூற்றாண்டுகளில் சிற்பவடிவம் கண்டுள்ளது.

சிலப்பதிகாரத்தின் பதினோராடல்களில் ஒன்றாக விளக்கப்படும் குடக்கூத்து பூதத்தாழ்வாராலும் பேயாழ்வாராலும் விஷ்ணு ஆடிய கூத்தாக விதந்தோதப்படுகிறது. ‘குடமாடிக் கோவலனாய் மேவி’, ‘குடம் நயந்த கூத்தனாய்’ எனும் பாடலடிகளைக் கண்ணே போல் போற்றிப் பல்லவர், பாண்டியர், சோழர் காலத்தே எழுந்த கற்றளிகளில் குடக்கூத்துச் சிற்பங்கள் விமானத்தின் அனைத்து உறுப்புகளிலும் இடம்பெற்றுப் பொலிந்தன. விஷ்ணு குடக்கூத்தாடிய இடம், அதற்கான காரணம், அங்கு நிகழ்ந்த போர் என நீண்டதொரு வரலாற்றைப் பேயாழ்வார் முன்வைக்கிறார். ஆழ்வார்கள் காலநிலை குறித்து விரிவான அளவில் ஆய்வுசெய்த பேராசிரியர் மு. இராகவையங்கார் இம்மூவர் காலத்தைப் பொ. கா. 6ஆம் நூற்றாண்டிற்குரியதாகவே பதிவுசெய்துள்ளார். எனில், இருண்டகாலமாகக் கருதப்படும் சங்கம் மருவிய காலத்தில் வைணவம் சார் தொன்மங்கள் எத்தகு வளர்நிலைகளைச் சந்தித்திருக்க வேண்டும் என்பதை உணரலாம். பரிபாடலில் சொல்லப்படாத புதிய தொன்மக்கூறுகளை இம்முதலாழ்வார் மூவரும் முன்வைப்பது அக்காலத்தே விளைந்த வைணவ வளர்ச்சியின் எதிரொலிப்பாகவே அமையும்.

கோயில்கள்

அப்பரும் சம்பந்தரும் பாடிய தமிழ்நாட்டுக் கோயில்களாய் அவர்தம் பதிகங்கள் அடையாளப்படுத்தும் 200க்கும் மேற்பட்ட இறையகங்கள் தமிழ்நாட்டின் நான்கு திசைகளிலும் பரவியிருந்தன. சோழமண்டலத்தில் எண்ணிக்கையில் மிக அதிகமாகவும் பல்லவர்பகுதியில் குறிப்பிடத்தக்க அளவிலும் பாண்டியர்பகுதியில் சற்றே குறைந்த அளவிலும் இருந்த சைவம் சார்ந்த இக்கோயில்கள் எக்காலத்தில் உருவாகியிருக்க முடியும்? அப்பரின் அடைவுத்திருத்தாண்டகம் ஊர், குடி, துறை, காடு, துருத்தி, வாயில், குளம், களம், ஆறு, பள்ளி எனப் பல்வேறு பின்னொட்டுகளுடன் அமைந்திருந்த எண்ணிறந்த ஊர்களின் கோயில்களைப் பதிவுசெய்துள்ளது. கொகுடிக்கோயில், கரக் கோயில், ஞாழற்கோயில், ஆலக்கோயில், இளங்கோயில், மாடக் கோயில், தூங்கானைமாடம் எனப் பல்வகைத்தனவாய் விளங்கிய இவையெல்லாம் மிகக் குறுகிய காலத்தில் தோற்றம் கண்டிருக்க முடியாது. சமயச் சிந்தனைகள் ஊரோடும் குடியோடும் சேர்ந்து வளர்பவை. காலநடையில் கனிபவை. மிகக் குறைந்த அளவில் கொண்டாலும் தமிழ்நாடு முழுவதும் சைவமும் வைணமும் கிளைத்துப் பரவிக் கோயில்களைக் கொண்டமைக்கு 100 150 ஆண்டுகளேனும் தேவைப்பட்டிருக்கும். சங்க காலத்திலிருந்து ஒரு தொடர் நிகழ்வாகவே இவை மாற்றங்களைக் கண்டும் வளர்நிலைகளை எய்தியும் காலநீரோட்டத்தில் சமூகத்தில் நிலைபெற்றதாகக் கொள்வதே பொருந்தும்.

சிவகங்கை மாவட்டத்திலுள்ள பிள்ளையார்பட்டிக் குடைவரை வளாகத்திருக்கும் எக்காட்டூருக்கோன் பெருந்தசன் எனும் வட்டெழுத்துக் கல்வெட்டை அதன் எழுத்தமைதி கொண்டு திரு. ஐராவதம் மகாதேவன் 6ஆம் நூற்றாண்டினதாகக் கொள்கிறார். சில கல்வெட்டாய்வாளர்கள் இக்கல்வெட்டை ஐந்தாம் நூற்றாண்டினதென்று கூறுகிறார்கள். தமிழ்நாட்டிலுள்ள 106 குடைவரைகளில் பிள்ளையார்பட்டிக் குடைவரை அமைப்பில் பிறவற்றினின்றும் முற்றிலும் மாறுபட்ட வடிவினது. தாய்ப்பாறை இலிங்கமுடைய அதன் கருவறை, தாங்குதளமும் கூரையுறுப்புகளும் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

குடைவரையின் பின்சுவரில் தாய்ப்பாறையிலான பிள்ளையாரின் அமர்நிலைச் சிற்பமும் துணைவர்களுடனான சங்கர நாராயணரின் நின்றநிலைச் சிற்பமும் முழுமையுற்ற நிலையில் சிறக்க வடிக்கப்பட்டுள்ளன. இடுப்புக்குக் கீழ்ப்பட்ட பகுதி பாறையாக விடப்பட்ட நிலையில் இலிங்கோத்பவரின் சிற்பம் கருவறையின் வடசுவரில் அமைந்துள்ளது. இம்மூன்று சிற்பங்களும் சைவம் சார்ந்த தொன்மங்கள் சமூகத்தில் வேரோடியிருந்தமையை உணர்த்தவல்லன. களப்பிரர் ஆட்சி பாண்டியர் பகுதியில் மூன்று நூற்றாண்டுகள் தொடர்ந்து இருந்ததாகக் கொள்வோமாயின், அவர்கள் சமணம் சார்ந்தவர்கள், சைவக்கோயில்களை அழித்தவர்கள் எனும் கல்லாடச் செய்தியில் சிறிதளவேனும் உண்மை இருக்குமாயின், ஐந்தாம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் பிள்ளையார்பட்டிக் குடைவரை எப்படி உருவாகியிருக்கமுடியும்? குடைவரையை ஆறாம் நூற்றாண்டினதாகக் கொண்டாலும் பொ. கா. 550வரை களப்பிரர்கள் கால்கொண்டிருந்த சமணஞ்சார்ந்த பாண்டியர்பகுதியில் சைவக்கோயில், தமிழ்நாட்டுக் கலைவரலாற்றின் புரட்சிப் படைப்பாகக் கருதப்படும் முதல் குடைவரை மிகக் குறுகிய காலத்தில் முழுமையுற்ற நிலையில் எங்ஙனம் வடிவமைக்கப்பட்டிருக்க முடியும்?

**(தொடரும்)**

# கந்தர் அநுபூதி

## ஓர் ஆனந்த அனுபவம்





**டாக்டர். வ.ஜெயபாலன்**

ஈப்போ, மலேசியா

### முன்னுரை

இறைவனை நமது கண்ணால் பார்க்க முடியுமா ? அறிவால் அறிய முடியுமா ? என்று கேட்பவர்களுக்கு ஒரே பதில்தான். இறைவனைப் பார்க்கவும் முடியாது. அவனை நம்முடைய அறிவால் அறியவும் முடியாது. மாறாக அவனை மனதால் உணர மட்டுமே முடியும் . ஏனென்றால் இறைமை என்பது ஒரு தனியான வஸ்து அல்ல. இறைமை என்பது ஒரு உணர்வு. அந்த இறைமைக்கு உருவம் இல்லை. ஆனால் உணர்வு உண்டு. இன்னும் சொல்லப் போனால் இறை உணர்வு என்பது ஓர் அனுபவம்.

ஆக, இறைவன் உணரப்பட வேண்டியவன். இதுதான் இறைவன் என்று வடிவமைத்து வரைந்து, செதுக்கி நாம் வழிபடுவது ஒரு குறியீடு மட்டுமே. இது இறைவனை அடைய ஒரு பற்றுக்கோடே தவிர சிலையும், சித்திரமும் இறைவனில்லை. இறைவன் இவனே என்று வேதங்கள் சொல்வதைப் படிப்பதால் மட்டும் இறைவனைக் காண முடியாது. பாலுக்குள் இருக்கும் நெய்யைக் காட்ட முடியுமா? தீயினுள் இருக்கும் வெம்மையைப் பிரிக்க முடியுமா? அதுபோல், இறைவனை மனதார உணர்ந்தவர் மட்டுமே அந்தப் பேரின்பத்தை அனுபவிக்க முடியும்.



## இறைவனை உணர என்ன செய்ய வேண்டும்?

நான் என்ற ஆணவத்தையும், எனது என்ற அகங்காரத்தையும் தூர எறிந்து விட்டு எல்லாம் இறைவனே என்று பூரண சரணாகதி அடைய வேண்டும். இதுவே வைணவர்கள் கண்ட சரணாகதித் தத்துவம். பாஞ்சாலி தன்னை மறந்து இருகரம் கூப்பி கண்ணனே சரண் என்று முழுதாகத் தன்னை அவனிடம் ஒப்புவிக்கும் பொழுதுதான் கண்ணன் தோன்றுகிறான்.

அருணகிரிநாதர் வாழ்விலும் இது நடந்தது. வாழ்வில் பல்வேறு சுகதுக்கங்களை அனுபவித்து விட்டு, இறுதியில் திருவருவருணைக் கோபுரத்தில் ஏறி "முருகா, குமரா, குகனே சரணம்" என்று சொல்லி முருகனே மெய்த்துணை என்று முருகப் பெருமானிடம் தன்னை இழக்கும் பொழுது அவருக்கு ஞானம் பிறக்கிறது. இறையனுபவம் வாய்க்கின்றது. கந்தர் அநுபூதி மெய்யடியார்களுக்காகப் பிறக்கின்றது.

"அநுபூதி" என்றால் உடன் சேர்தல் அல்லது "சரணடைதல்". "பற்றுக பற்றற்றான் தாளினை" என்பார் வள்ளுவப் பெருந்தகை. "எல்லாவற்றையும் மறந்து என்னையே சரணடைவாயாக" என்பது கீதையின் சாரம். கந்தனின் திருவடி சரணெனப் பற்றிய அருணகிரிநாதரின் கந்தரநுபூதி இறையனுபவத்தின் வெளிப்பாடு.

காப்புப் பாடலாகிய விநாயகர் வணக்கத்திலேயே "நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்துருகத் தஞ்சத்து அருள் சண்முகனுக்கு இயல்சேர் செஞ்சொல் புனைமாலை" என்று சொல்லி நெஞ் சமாகிய கல் நெகிழ்ந்து, உருகி, "ஐயனே! நீயே எனக்குப் புகலிடம்; வேறு தஞ்சம் எமக்கில்லை" என்று அடியார்கள் பணியும் சண்முகனுக்கு இயற்றமிழால் புனையப்பட்டது இச்சொல் மாலை என நூலின் நோக்கத்தை விளக்குகிறார் அருணை முனிவர்.

கந்தரநுபூதிக்கு இன்னொரு பெயர் "மந்திர மணி மாலை". சுருங்கச் சொல்லி நிறைய விளங்க வைப்பது "மந்திரம்". "மணி" என்பது உருவத்தில் சிறியது. ஆனால், ஒளி மிகுந்தது. "மாலை" என்பது மணியான மந்திரங்களால் தொகுக்கப்பட்ட இலக்கியம்.

அழகான தமிழ்நடையுடன் கூடிய கந்தரநுபூதியை படிப்பதே ஓர் ஆனந்த அனுபவம்.

## கிளியாக மாறி எழுதிய பாடல்



இந்த நூலை, அருணகிரிநாதர் கிளியாக உருமாறிய பின்பு எழுதினார் என்பது ஓர் உருவகக் கதை. கிளி பேசுமா? அதுவும் கவிதை பாடுமா? என்று கேலி பேசுவார்கள் நமது நாத்திக நண்பர்கள்.

ஒரு நல்ல மாணவன் குரு சொன்னதை



அப்படியே சொல்வான். கிளியும் சொன்னதைச் சொல்லும். முருகன் குருவாக வந்து, அருணகிரிநாதருக்கு உணர்த்திய அனுபவத்தை திரும்பச் சொன்னதால் அவர் கிளியாகச் சித்தரிக்கப்பட்டார் என்பதே உண்மை. இதையே "யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும் தாமே பெற வேலவர் தந்தது" என்றும், முத்தாய்ப்பாக ஐம்பத்தோராவது பாடலில் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்றும் பாடுகிறார்.

## ஒரு வரியில் கந்தபுராணம்

"ஆடும்பரி வேல் அணிசேவல்" என்பது கந்தர் அநுபூதியின் முதல் வரி. போரில் மாயாவியான சூரன் மாமரமாக மாயம் செய்கிறான். பகைவருக்கும் அருளும் பக்த சகாயன் அல்லவா முருகப்பெருமான். போரில் சூரனை மாய்க்கவில்லை. ஆனால், மாமரத்தை வேலால் பிளந்து ஆடுகின்ற மயிலாகவும், தான் ஏந்துமின்ற அழகிய சேவல் கொடியாகவும் மாற்றுகிறார். இந்த கந்த புராணச் சாரத்தை ஒரே வரியில் ஆடுபம்பரிக்கும், சேவலுக்கும் இடையே வேலை வைத்து நமக்கு படம் பிடித்துக் காட்டுகிறார்.

அடுத்து வரும் ஐம்பது பாடல்களில் மனித வாழ்வில் துன்பங்களின் காரணங்கள், அந்த துன்பங்களிலிருந்து விடுபடும் வழிமுறை, அதன் விளைவாக மரணபயம் தீர்ந்து முக்தியடைதல். பின்பு அந்த முக்தியினால் வரும் சுகானுபவம் என்று படிப்படியாக விளக்கி முத்தாய்ப்பாக அந்த சுகானுபவத்திற்குக் காரணம் குருவாகி வந்த குகனே என்று நிறைவு செய்கிறார்.

## துன்பத்தின் பிறப்பிடம்

துன்பத்தின் பிறப்பிடம் ஆசை. மனிதன் அத்தனைக்கும் ஆசைப்படுபவன். ஆசைப்பட்டது கிடைக்காவிடில் கோபம் வரும். கிடைத்து விட்டால் அகங்காரம் வரும். அகங்காரம் மிகுந்தால் சக மனிதரின் மேல் மதிப்புக் குறையும். தன் நிலையைத் தக்க வைக்க பஞ்ச பாதகங்களும் செய்யத் துணியும். ஆக ஆசையே அனைத்துக்கும் அடிப்படை.

அப்படியானால், ஆசையை அழிக்க முடியுமா? அது முடியாத காரியம். ஆனால், ஆசைப்படும் பொருளை மாற்றலாம். உலகப் பொருட்களின் மேலுள்ள ஆசையை, என்றென்றும் பக்தி என்ற பெயரில் இறைவனின் மேல் மாற்றுவதே, துன்பத்தைத் தவிர்க்கும் வழி என்கிறார் அருணகிரிநாதர்.

"பேராசை எனும் பிணியில் பிணிபட்டு
ஓரா வினையேன் உழலத் தகுமோ"

என்று சொல்லி பேராசை என்ற நோயில், தன்னை உழல வைப்பது தகுமா என்று முறையிடுகிறார்.

முதலாவதாக உயிருள்ள பொருட்களான மனைவி, மக்களின் மேலுள்ள ஆசை, இரண்டாவதாக உயிரில்லாத மண், பொன்

மேலுள்ள ஆசை, மூன்றாவதாக தன் மேலுள்ள ஆசை என்று ஆசைகளை மூன்று வகைப் படுத்துவார்கள். இதை "மூவேடணை" (மூ ஏடணை மூன்று வித ஆசைகள்) என்றும் சொல்வார்கள். ஏழு பிறப்பும் நீங்கி முக்தி பெற வேண்டுமென்றால், மாயை மிகுந்த மூவேடணையாகிய ஆசை அறவேண்டும் என்று பொருள்படுமாறு அநுபூதியில் கூறுகிறார்.

"மாவேழ் சனனம் கெட மாயை விடா
மூவேடணை என்று முடிந்திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணரும்
தேவே சிவசங்கர தேசிகனே"

இங்கே திருமூலர் சொல்லிய "ஆசை அறுமின்! ஆசை அறுமின்! ஈசனோடா யினும் ஆசை அறுமின்!" என்ற திருமந்திரம் எதிரொலிக்கின்றது.

## ஆசையை மாற்றும் வழி

ஆசையை மாற்றுவதற்கு அருணகிரிநாதருக்கு பிறப்பும் இறப்பும் இல்லாப் பெருமான் முருகன் ஒரு வழியைப் போதிக்கின்றான். அது என்ன வழி? அதுவே "சும்மா இரு! சொல்லற!" என்ற மந்திரச் சொல்.

கீதையில் கண்ணன் சொன்ன கர்மயோகம் , தாமரை இலையின் மேல் தண்ணீர் போன்ற பற்றில்லாத நிலையே "சும்மா இருக்கும்" உயர்நிலை. சும்மா இருப்பதென்றால் ஒன்றும் செய்யாமல் இருப்பது என்று பொருளில்லை. உலகப் பற்றுகளிலிருந்து விலகி நிகழ்காலத்தில் இருக்கும் யோக நிலை அல்லது விழிப்பு நிலை. இதையே பத்திரகிரியார், "தூங்காமல் தூங்கி சுகம் பெறுவது எக்காலம்?" என்று கேட்கிறார்.

அடுத்ததாக "சொல்லற" என்பது மோன நிலையைக் குறிக்கும்.



"சும்மா இரு. சொல்லற என்று இறைவன் சொன்ன மாத்திரத்தில் உலகப் பொருள் ஒன்றையும் அறியாது நிற்பதையே''

"சும்மா இரு சொல்லற என்றலுமே அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே" என்று குறிப்பிடுகிறார்.

எப்படி இது சாத்தியம்? அதற்கும் விடை சொல்கிறார். அதுதான் தன்னிலை மறந்த நிலை என்று பொருள்பட "எல்லாம் அற தன்னை இழந்த நலம் சொல்லாய் முருகா சுரபூபதியே" என்கிறார்.

எல்லாப் பற்றிலும் இருந்து விடுபட்டு தன்னை இழக்கும் தருணத்தில் சும்மா இருக்கும் சுகம் கிடைக்கும். உலகின் பல அதிசயங்கள் நிகழ்ந்தது மேதைகள்

தன்னை மறந்த நிலையில்என்பதை சரித்திரம் பதிவு செய்கின்றது.

கணித மேதை ராமானுஜர் உறங்கும் பொழுது கனவிலே, பல கணித வினாக்களுக்கு விடை கண்டுப்பிடித்தார். கவியரசு கண்ணதாசன் தன்னை மறந்த நிலையில் தான் பல அழியாப் புகழ்பெற்ற பாடல்ளை எழுதினார்.

அபிராமி அந்தாதி எழுதிய அபிராமி பட்டர் தன்னை மறந்த நிலையில் தான் அற்புதமான அந்த அந்தாதிப் பாக்களை இயற்றினார். உலகின் பல கண்டுபிடிப்புகள், எதிர்பாராத நேரத்தில், தன்னை மறந்த நிலையிலேயே கண்டுப் பிடிக்கப்பட்டன.

தான் என்ற நினைவு அற்று, பரப்பிரம்மத்தில் ஐக்கியமாகும் பொழுது அதிசயங்கள் நிகழ்கின்றன. இதுவே கந்தரனுபூதி சொல்லும் "எல்லா அற தன்னை இழந்த நலம்"

## மரணபயம் போக்கும் மாமருந்து

உலகத்திலேயே மிகவும் கொடியது எது? மனிதர்கள் எல்லோரும் அஞ்சுவது எது ? என்று கேட்டால் மரணம் தான் அதற்கு பதிலாக இருக்கும். ஆனால் முருகன அடியார்களுக்கு அந்த மரணம் கூட ஒரு சாதாரண சம்பவம்தான்.

"மரணப் பிரமாதம் நமக்கில்லையாம்" என்று மரணத்தை துச்சமாக எண்ணியவர் அருணகிரிநாதர்.

"சூலம் பிடித்தெம் பாசம் கழற்றித் தொடர்ந்து வரும் காலன் தனக்கொரு காலும் அஞ்சேன்" என்பார் கந்தரலங்காரப் பாடலில்.

அருணகிரிநாதருக்கு மட்டுமா மரணபயம் இல்லை ? முருகனின் திருவடி நிழலில் ஒதுங்கிய எந்தவொரு அடியவரையும் மரணபயம் நெருங்காது.

"கார்மாமிசை காலன் வரிற் கலபத்
தேர்மாமிசை வந்தெதிரப் படுவாய்"

என, கருமையான எருமையின் மீது காலன் வரும்பொழுது, அழகிய தோகையுடைய மயில் வாகனத்தில் முருகன் எதிர் வருகிறான் என்ற நிலையில் மரணபயம் எங்கிருந்து வரும்?

"கூகா" என சுற்றத்தார்கள் (கிளை) கூடி அழும்படியாக, முருக பக்தர்கள் எமனிடம் என்றைக்கும் போக மாட்டார்கள். ஏனெனில் மெய்ஞான மூர்த்தியின் பூரண அருள் பெற்றவர்களுக்கு, மரணம் என்பது வாழ்க்கையின் ஒரு கட்டம். குழந்தைப் பருவம், இளமைப் பருவம், முதுமைப் பருவம் என்பது போல மரணமும் ஒரு பருவ நிகழ்வே. இறப்பு என்பது முடிவல்ல மனிதனுக்கு. இந்த கருத்தை எதிரொளிக்கும் அருணை முனிவரின் அநுபூதிப்பாடல் இதோ:

"கூகா என என்கிளை கூடி அழப்
போகாவகை மெய்ப்பொருள் பேசியவா
நாகாசல வேலவ நாலுகவித்
தியாகாசுர லோக சிகாமணியே"

## பேரின்பம் தரும் பேராளன்

மரண பயத்தை வென்ற முருகனடியார்கள், முருகனை நேரில் பார்த்ததுண்டா? "முக்தி" என்று சொல்கிறார்களே அந்த பேரின்ப நிலையை அடைந்ததுண்டா? என்று சிலர் கேட்கலாம். இதற்கான பதிலையும் அருணகிரிநாதரே அழகாகச் சொல்கிறார்.

"தன்னந்தனி நின்றது தான் அறிய
இன்னம் ஒருவருக்கு இசைவிப் பதுவோ?"

எல்லாவிதமான உலக மாயைகளிலிருந்தும் நீங்கி, தனிமையான பேரின்ப வெள்ளத்தில் தான் திளைத்ததை, அந்தப் பேரின்பம் இத்தன்மையானது



என்பதை எப்படி விவரிப்பேன் என்கிறார். இதைத்தான், "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" என்று வாய்மொழியாக நமது முன்னோர்கள் சொன்னார்கள்.

சரி. அந்தப் பேரின்பம் எத்தகையது? அது எப்படிக் கிடைக்கும்? இதற்கும் பதில் உண்டு அநுபூதியில்.

இறைவனின் திருவுருவம் இறைவனை ஒருமுகமாக நாம் தியானிக்க உதவும் குறியீடு (Symbol). ஆனால், அந்தக்குறியை இடம், பொருள், காலம் எல்லாம் மறந்து அந்த உருவத்தையே சதா சர்வ காலமும் தியானித்து (குறித்து) அறியும் நெறியை தனிவேலை உடைய ஐயன் (தனிவேல் + ஐ) எனக்கு உணர்த்தியதும் உலகத்தாருடன் உறவு அற்று, நினை அற்று, சொல் அற்று, சுட்டி அறிந்திடும் அறிவும் அற்று, அறியாமையும் அடியோடு அற்றது. இந்த நிலையே அவர் அனுபவித்த பேரின்ப வெள்ளம். அந்த பேரின்பத்தைத்தான் அருணகிரிநாதர் பின்வருமாறு சொல்ல முயற்சிக்கிறார்.

"குறியைக் குறியாது குறித்து அறியும்
நெறியைத் தனிவேலை நிகழ்ந்திடலும்
செறிவற்று உலகோடு உரை சிந்தையுமற்று
அறிவற்று அறியாமையும் அற்றதுவே"

## குருவாகி வந்த குகன்

இத்தகைய பேரின்பத்தை அருணகிரிநாதர் அடையக் காரணம் குருவாகி வந்த குகன். அவன் தாளை வணங்க அவனருள் வேண்டும் என்பதைப்போல பேரின்ப அனுபவத்தை ஒரு ஆன்மா அடைவதென்றால் அதற்கும் இறைவனின் அருள் வேண்டும்.

கந்தர் அநுபூதி பெற்று கந்தர் அநுபூதி சொன்ன எந்தை என்று அருணகிரிநாததரை நயந்தும், வியந்தும் போற்றுகிறார். பின்னாளில் வந்த தாயுமானவர். இறைவன் பல்வேறு வகையில், பல்வேறு உருவங்களில் வெளிப்படலாம். ஆனால் மனமாயிருக்கிற குகையிலிருக்க கூடிய குகன், குருவாக வந்து அருளினால் ஒழிய மனிதன் "முக்தி" எனும் பேரின்ப நிலையை அடைய முடியாது என்று மனத்திலுள்ளே இருக்கும் முருகனை குருவாகக் காட்டுகிறார் அருணகிரிநாதப் பெருமான்.

## நிறைவு

கந்தர் அநுபூதி அருணகிரிநாதரின் அனுபவத்தின் வெளிப்பாடு. அதன் தமிழ் நடை படிப்பதற்கு எளியது. அதற்குத் தனியாக ஒரு விளக்கவுரை கூடத் தேவையில்லை.

இன்பத்தை நாடும் மனிதன் ஆசையின் விளைவால், ஆணவம் ஓங்க துன்பத்தில் உழல்கிறான். அந்த துன்பத்தை துடைப்பது இறைவனின் திருவடி. தான் என்ற அகந்தையை ஒழித்து அந்தத் திருவடியைப் பற்றினால் இறையருளால் பேரின்ப நிலையை

எல்லோரும் அடையலாம். இறைவன் மனமாகிய குகைக்குள்ளே குகனாக இருக்கிறான். அவனை உணர்ந்தவர்க்கு குருவாக வருவான். அருள் தருவான். நம் மனக்குகையில் இருக்கக்கூடிய முருகப்பெருமான் குருவாக எழுந்தருளி வந்தால் நாம் இதுவரை உருவமாக நினைத்து வந்தது அருவமாகவும் , சிலைக்கு உள்ளே இருக்கும் இறைவன் அதற்குள் இல்லாதவனாகவும், அந்த இறைவனை உணர்ந்ததால் மொட்டாக இருந்த மனம் மலராகவும், மணியாக இருந்த உணர்வுகள் ஒளியாகவும், கருவாக இருந்த ஆத்மா உயிராகவும், கதியாக இருந்தவை விதியாகவும் மாறியது.

இதையே முத்தாய்ப்பாக வரும் அனுபூதிப் பாடலில் கூறுகின்றார்.

உருவாய் அருவாய், உளதாய் இலதாய்
மருவாய் மலராய், மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க், கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய், அருள்வாய் குகனே.

இதுதான் அநுபூதியின் சாரம். இதைப் படிப்பவருக்கு மனதில் நீங்கும் பாரம். ஏனெனில் கந்தர் அநுபூதியை படிப்பதே ஓர் ஆனந்த அனுபவம். அந்த அனுபவத்தைப் பெறுவதற்கு இன்றே நல்ல நேரம்.

**“முருகா குமரா குக ஓம் சரணம்”**

# திருமந்திரம்

கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உண்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.

**விளக்கம்:**

மண்ணும் விண்ணும் ஆகிய எங்கணும் நறுமணம் கமழும் சந்தனமும், அத்தகைய சிறந்த மணம் கமழும் நறுமலர்கள் கொண்டு நாளும் வழிபட்டாலும் அவ்வழிபாடு இறைவனைக் காட்டாது. தம்மை அடிமை என்று இறைவனிடத்தில் தன்னைத் தந்து, பிற உயிர்களைக் கொல்லாமலும் கொன்றதைத் தின்னாமலும் இருப்பதாகிய செந்நெறியில் ஒழுகிச் சிவனை நினைப்பார்க்கு அன்றி, திருவருள் கிடைக்காது.

****************

கோனக்கன் றாயே குரைகழல் ஏத்துமின்
ஞானக்கன் றாகிய நடுவே யுழிதரும்
வானக்கன் றாகிய வானவர் கைதொழும்
மானக்கன் றீசன் அருள்வள்ள மாமே.

**விளக்கம்:**

சிவபெருமான் வானுலகப் பசுக்களாகிய தேவர்களால் என்றும் தொழப்படும் சிறப்பினன். எவர்க்கும் முழுமுதலாய் வேண்டுவார் வேண்டும் உருவத்துடன் தோன்றுபவராய் உள்ள சிவபெருமானின் தாயாய் விளங்குபவள் அம்மை. அவ்வம்மையின் ஒலிக்கும் சிலம்பணிந்த திருவடியிணையினைப் போற்றித் தொழுங்கள். தொழுதால் அம்மை, மெய்யுணர்வு நல்கும் வித்தாய் உங்கள் நடுவே எழுந்தருள்வள். அவள் எழுந்தருள்வதால் பெருமைமிக்க ஆனேற்றின்மீது வரும் சிவபெருமானின் பேரின்பப் பெருவளம் மிக்கு உண்டாகும்

# கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
# கோவிலூர் புதையல்கள் - 9

## பழனியப்ப ஐயா அவர்களின்

# கல்லுளிமாலை

## - நூல் அறிமுகம்


உ
சிவமயம்.
பாண்டிநாட்டிலுள்ள
கோயிலூர் மடாலயத்தின்
சிஷ்யராகிய
சொர்னநாதபுரம்
பழனியப்ப ஐயா அவர்கள்
இயற்றிய
பாடற்றிரட்டு.

இஃது
ஷை மடாலய சிஷ்யராகிய
ஒய்யக்கொண்டான் சிறுவயல்,
முரு - அள -
சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களால்
தஞ்சாவூர், சதாவதானம்,
சுப்பிரமணிய ஐயரவர்கள்
முன்னிலையில்
பரிசோதிக்கப்பட்டு,

சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
1898-ல



இந்த நூலை முழுமையாகத் தரவிறக்கம் செய்ய இந்த லிங்க்கை கிளிக் செய்யவும்





- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

ஒரு சிற்பத்தை உருவாக்குபவன் சிற்பி. அந்த சிற்பியும் வெறும் கைகளால் அந்தச் சிற்பத்தை உருவாக்கிவிட முடியாது. அதற்கு ஒரு கருவி தேவை. அக்கருவிதான் உளி. ஒரு சிற்பம் உருவாக உளி என்பது இன்றியமையாதது. அதுபோல் தன் வாழ்வில் தன்னைச் செதுக்குவதற்கு, தன்மனம் ஆகிய கல்லைச் செதுக்கிச் சிற்பம் ஆக்குவதற்கு உதவியாக, கருவியாக உளி போல இருப்பவன் பழனி முருகன் என்று எண்ணுகிறார் பழனியப்ப ஐயா. எம்பெருமான் முருகனிடம் வேண்டி, நிதியைப் பெற்று, அதனை அறச் செயல்களுக்குப் பயன்படுத்த வேண்டும் என்று கருதி கல்லுளிமாலை என்ற பெயரில் நூல் ஒன்றை இயற்றியுள்ளார் பழனியப்ப ஐயா. கல்லுளி மாலை என்ற இந்த வகை தமிழ் இலக்கிய வகைகளும்

புதுமையானதாக விளங்குகிறது.

சிற்றிலக்கிய வகைகளில் ஒன்றான இம்மாலையில் அமைந்துள்ள பாடல்கள் மொத்தம் 276. முதல் பாடல் விநாயகர் காப்பாக அமைந்துள்ளது.

பழனியப்ப ஐயா இயற்றிய செட்டியார் மாலை என்ற நூலில் உள்ளவாறே இந்நூலிலும் முருகனை, செட்டி என்று வரிக்கு வரி ஐயா, விளித்துப் பாடுகிறார். சிவனையும் பார்வதியையும் அப்பச்சி, ஆத்தா என அவர் அழைப்பது இந்நூலில் உள்ள புதுமை ஆகும்.

"அப்பச்சிக்குந்தெரியுமே பழனிச்செட்டி நம
தாத்தாட்குந்தெரியுமே பழனிசெட்டி
செப்புமுனக்குந்தெரியும் பழனிச்செட்டி நமது
சேட்டனுமறிவானே பழனிச்செட்டி"

என்று சிவபெருமானை பழனி முருகனின் அப்பச்சியாகக் காண்கிறார். இதன்மூலம் முருகன் குலம் நகரத்தார் குலமாகின்றது.

ஐயா அவர்கள் பழனி முருகனிடம் நிதி கேட்கிறார். நான் தப்பாகக் கேட்டவில்லை முருகா. நான் சத்தியவான். அது நமது அப்பச்சியான சிவனுக்கும், ஆத்தாவான பார்வதிக்கும், அண்ணனான விநாயகனுக்கும் தெரியும் என்று சொல்வது முருகனை நம்மில் ஒருவனாகக் காட்டுகிறார்.

முருகா! உனக்கு முன்பாக, நான் பாக்குவெற்றிலை போட்டு, உன் பக்கத்தில் துப்பினேனா? பிறரிடம் உன்னைப் பற்றிப் புறம் பேசினேனா? உன் முன்பாகப் பிறரைத் திட்டினேனா? எதுவும் செய்யவில்லை. என்னிடம் உள்ள தீய குணங்களை எல்லாம் நீக்கிவிட்டேன். எனக்கு விரைவாக நிதி தருவாய் என்று வேண்டுகிறார். இவை இறைவனிடம் பக்தன் வேண்டுவது போல் இல்லை. தனது நண்பனிடம் உரிமையாய்க் கேட்பது போல் கேட்கிறார் பழனியப்ப ஐயா. அவ்வரிகள்,

"பாக்குவெற்றிலைபோட்டுப் பழனிச்செட்டி
யுன்முன்
பக்கத்திற்றுப்பினேனோ பழனிச்செட்டி
போக்கற்றவர்போல் பழனிச்செட்டி யுன்னைப்
புறஞ்சொல்லித்திரிந்தேனோ பழனிச்செட்டி
வாக்கினிமைப்பேச்சென்னப் பழனிச்செட்டி
யுன்முன்
வைதேனோயாரையுநான் பழனிச்செட்டி
தீக்குணநீக்கினேன் பழனிச்செட்டி நிதி
சீக்கிரந்தாநடனீ பழனிச்செட்டி"

இவ்வளவு உரிமையாய் இறைவனிடம் ஐயா வேண்டுவது இறைவன்பால் அவர் கொண்ட நேசத்தைப் புலப்படுத்துகிறது.

முருகா! உனக்கு உணவு படைக்கும் தாம்பாளத் தட்டில் நான் உண்டு எச்சில் தட்டாக்கினேனா? உனக்கு அபிடேகம்செய்யும் பாத்திரத்தில் நான் வாய் வைத்து தீர்த்தம் குடித்தேனா? நான் எந்தத் தவறும் செய்யவில்லை என முருகனைத் தன் உடன் பிறந்தோனாகக் கருதி ஐயா அவர்கள் பாடும் வரிகள் யாரும் கேட்டிராதவை. அவ்வரிகள்...

"உனக்கன்னம்படைத்திடப் பழனிச்செட்டி யன்பர்
உதவுந்தாம்பாளத்திற் பழனிச்செட்டி
எனக்கன்னமிடச்சொல்லிப் பழனிச்செட்டி யதை
யெச்சிற்கலமாக்கினனோ பழனிச்செட்டி"

"ஆசாரச்சைவனே பழனிச்செட்டி யுன

தபிடேகக்கலயத்தைப் பழனிச்செட்டி
கூசாமல்வாயில்வைத்துப் பழனிச்செட்டி தீர்த்தங்
குடித்தேனோநானுந்தான் பழனிச்செட்டி”

என்பதாகும்.

## தூய சைவன் தான் எனக் கூறுதல்

முருகா! நான் உன்னுடைய தீவிர பக்தன். நான் புத்தன் அல்ல. என் நெற்றியைப் பார் திருநீறு இருக்கிறது. பொல்லாத சமணனும் அல்ல. ஆகவே, எனக்கு அறம் செய்ய நிதி தா என்று பாடுகிறார்.

“புத்தனன்றேநான் பழனிச்செட்டி நுதலிற்
பூதியைப்பாராய் பழனிச்செட்டி
பத்தனல்லோநான் பழனிச்செட்டி நிதி
பாலிப்பாயொல்லையிற் பழனிச்செட்டி”

“....பொல்லாச் சமணன் நானல்ல பழனிச்செட்டி”

என்ற பாடலடிகளின்வழி திருநீறு அணிந்த சுத்த சைவன் தான் என்பதை உணரத்துக்கிறார் ஐயா.

## புலியூரில் அறம் செய்ய விரும்புதல்

செட்டியார் மாலை பாடல்களிலும், கல்லுளிமாலை பாடல்களிலும் புலியூரில் தான் அறம் செய்ய விரும்புவதாக ஐயா குறிப்பிடுகிறார்.

“பொன்னெற்குமிகத்தா பழனிச்செட்டி நல்ல
புலியூரிலறஞ்செய்யப் பழனிச்செட்டி
உன்னையல்லாமலே பழனிச்செட்டி யெனக்
குறவெவர்நடனீ பழனிச்செட்டி”

என்பது அப்பாடல். முருகா! தங்கத்தை எனக்குத் தா. புலியூரில் அறம் செய்ய வேண்டும். நான் யாரிடம் கேட்பேன் . உன்னையன்றி எனக்கு யார் உறவுக்காரர்கள். என்கிறார். ஐயா அவர்கள் குறிப்பிடும் புலியூர் எது? என்று தெரியவில்லை. புலியூர் என்னும் பெயரில் தமிழகத்தில் 9 தலங்கள் உள்ளன. 1.பெரும்பற்றப்புலியூர் (சிதம்பரம்), 2.திருப்பாதிரிப்புலியூர் (கடலூர் அருகில் உள்ள தலம்), 3. எருக்கத்தம் புலியூர்(கடலூர் மாவட்டத்தில் உள்ள இராஜேந்திரப்பட்டினத்தில் உள்ளது), 4.ஓமாம்புலியூர் (சிதம்பரத்திலிருந்து 30 கி.மீ தொலைவில் உள்ளது), 5.சிறுபுலியூர் (மயிலாடுதுறை அருகில் உள்ளது), 6.தப்பளாம்புலியூர் (திருவாரூரிலிருந்து 5கி.மீ தொலைவில் உள்ளது) 7.அத்திப்புலியூர் (கீழ்வேளுருக்கு அருகில் உள்ளது), 8.பெரும்புலியூர் (திருவையாற்றுக்கு அருகில் உள்ளது), 9.கானாட்டம் புலியூர் (சிரம்பரத் திலிருந்து 30 கி.மீ தொலைவில் உள்ளது) இவை நவபுலியூர் தலங்கள் என அழைக்கப்படுகின்றன. இவற்றில் எந்தப் புலியூரை ஐயா அவர்கள் சுட்டுகிறார் என்பது ஆராய்தற்கு உரியது.

## முருக பக்கதர்கள் பலர்

ஐயா அவர்கள் பாடலின் இடையில், முருக பக்தர்கள் என்றும், கோயிலூர் மாணாக்கர் என்றும் சிலரின் பெயர்களைக் குறிப்பிடுகிறார். அவர்கள்,

1. பள்ளத்தூர் பரதேசி – முருக பக்தர்
2. சுப்பராயப்பரதேசி – இவர் துறவாண்டவரின் மாணவர். துறவாண்டவர் பற்றி பிள்ளைத் தமிழ் எழுதியவர்.
3. சிதம்பர ஐயா – கருணாநிதி சுவாமிகள்

4. மாதேவர் கிருட்டினர் – முருக பக்தர்

5. பாகனேரி முத்தஞ்சனம் – முருக பக்தர்

6. கல்லல் சுவேதன் (முருகன் கோயில் கட்டியவர்) – முருக பக்தர்

7. காரைக்குடி நற்கலி – முருக பக்தர்

இவர்களில் சிலர் பற்றி முழுமையான விவரங்கள் தெரியவில்லை. பரதேசி என்று சிலரை ஐயா அவர்கள் குறிப்பிட்டுள்ளார். பரதேசி என்பது ஓரிடத்தில் தங்காமல் பல தேசங்களுக்கும் செல்பவர்கள் என்பது பொருள்.

## வேதாந்த நூல்களின் மீதான நம்பிக்கை

”வேதாந்தநூலினைப் பழனிச்செட்டி சற்றும்
விரும்பாதவர்களைப் பழனிச் செட்டி
மூதேவிகளென்றே பழனிச்செட்டி கண்டால்
முகத்தைநான் மாறுவேன் பழனிச்செட்டி”

என்ற பாடல் இவரின் வேதாந்த நூல் விருப்பத்தினைக் காட்டுவதாக உள்ளது. கோயிலூர் மடத்தின் முக்கிய நோக்கமே, வேதாந்தக் கருத்துகளை தமிழில் அனைவருக்கும் போதிப்பதே. அதன் பொருட்டே மாணவர்கள் இங்கு வந்து தங்கி வேதாந்தம் பயின்றனர். அப்படிப் பயின்றவர்களில் ஒருவரே பழனியப்ப ஐயாவுமாவார். அவர் கூறுகிறார். ”முருகா! வேதாந்த நூல்களைச் சிறிது கூட விரும்பாதவர்களை நான் மூதேவி என்று அழைப்பேன். அவர்களைக் கண்டு நான் கோபம்கொண்டு முகம் மாறுவேன்” என்று பாடுகிறார்.

மற்றொரு இடத்தில்,

”வேதாந்த நூலையும் பழனிச்செட்டி யன்பு
மேவுசைவ நூலையும் பழனிச்செட்டி
தீதின்றி நம்புவேன் பழனிச்செட்டி மற்றத்
திருட்டுநூலை நம்பேனே பழனிச்செட்டி”

என்றும் பாடுகிறார். முருகா! நான் வேதாந்த நூல்களையும், சைவ நூல்களையும் முழுவதுமான நம்புகிறேன். இவை தவிர்த்த பிற நூல்களை நம்பமாட்டேன்” என்கிறார். பிற நூல்களைத் திருட்டு நூல்கள் எனச் சாடுகிறார்.

புரட்சியாளர் சாதியைச் சாடியிருக்கிறார் ஐயா. கோவிலூர் மடத்தை ஆண்டவர் தொடங்கிய போது, அவரது முக்கிய நோக்கம். வேதாந்தத்தை தமிழில் கற்பிக்க வேண்டும். அதுவும், குறிப்பிட்ட சாதியினர் மட்டுமே கற்க வேண்டும் என்ற நிலை இருக்கக் கூடாது. அனைவரும் கற்க வேண்டும் என்பதே. ஆண்டவருடைய எண்ணம். அதைப் பிரதிபலிப்பதே ஐயா அவர்களின் கருத்து. அதனை சற்று மாற்றிக் கூறியிருக்கிறார். அது கீழ்வருமாறு,

“வேதியரென்றாலும் பழனிச்செட்டி யுன்னை
விரும்பாதார் புலையரே பழனிச்செட்டி
சாதியிழிந்தோர் ரெனினும் பழனிச்செட்டி யுனைச்
சார்ந்தவரே மேலோர் பழனிச்செட்டி”

“முருகா! உன்னை வழிபாடாதோர் உயர்ந்த சாதியினராயினும் தாழ்ந்த சாதியினராகவே கருதப்படுவர். உன்னை வணங்கி உன்னைச் சார்ந்து வாழ்பவர்கள் தாழ்ந்த சாதியினராயினும் உயர் சாதியனராகவே கருதப்படுவர்” என்று கூறுவது புரட்சிதானே.

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்



## அது தானா?

- வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்

நாம் இறைவனை உணராமல் வாழ்கிறோம். அவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பை நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. அதனால் அவனைச் சிந்திப்பதும் இல்லை. என்றாலும் இறைவன் நம்மை விடுவதில்லை. அவன் எப்போதும் நம்மைக் கவனித்துக்கொண்டே இருக்கிறான். நாம் அவனை அணுகவில்லை என்பதற்காக அவன் நம்மைப் புறக்கணிப்பதில்லை. அவனுடைய அருளைப் பெறவேண்டும் என்று நாம் எண்ணாமல் இருந்தாலும், தன்னுடைய அருளை வழங்க வேண்டும் என்று அவன் காத்திருக்கிறான்.

கம்பர் இந்த நிலையை விராதன் துதியில் இணைத்துச் சொல்கிறார்.

தாய் தன்னை அறியாத கன்றில்லை; அக்கன்றை
ஆயு மறியும் உலகின்தாய் ஆயின்ஐய,
நீஅறிதி எவ்வுயிரும்; அவை உன்னை நிலையறியா;
மாயம்இது என்கொலோ? வாராதே வரவல்லாய்!"

புன்செய்க் காட்டில் ஒரு பெரிய வீடுகட்டினான் ஒருவன். அதில் இருந்த கிணற்றை அப்படியே வைத்துக்கொண்டான். அவ்ன் உடற்ப யிற்சி செய்து உடம்பை வலிவுள்ளதாக வைத்திருப்பவன். ஒரு நாள் அவன் மனைவி அந்தக் கிணற்றில் தண்ணிர் எடுத்தாள். தாம்புக் கயிற்றில் குடத்தைக் கட்டித் தண்ணிர் இழுத்தாள். கயிறு அறுந்து குடம் கிணற்றுக்குள் விழுந்து விட்டது.

அந்தப் பெண்மணி தன் கணவனிடம், "யாரேனும் ஆள் இருந்தால் பாருங்கள், கிணற்றில் விழுந்த குடத்தை எடுக்க வேண்டும்" என்றாள்.

"ஆள் எதற்கு? நான் எடுக்க மாட்டேனா?' என்று சொல்லி

அவன் கிணற்றில் குதித்தான். அகலமான கிணறாதலின் குதித்த இடத்தில் குடம் கிடைக்கவில்லை. மேலே வந்து மூச்சு விட்டு, மறுபடியும் ஓரிடத்தில் முழுகினான். அப்போதும் கிடைக்கவில்லை. மறுபடியும் வேறிடத்தில் முழுகினான்; கிடைக்கவில்லை. இப்படி எட்டு முறை மூழ்கியும் குடம் கிடைக்கவில்லை. கடைசியில் ஒன்பதாவது முறை மூழ்கினான். குடம் தட்டுப்பட்டது. அதை எடுத்துக்கொண்டு வந்தான்.

குடம் அவனது உடைமை. அதற்கு அவன் உடையவன். குடம் ஒரு முறைதான் முழுகியது. அதை எடுக்கப் புகுந்தவனோ ஒன்பது முறை முழுகினான். இதை, "உடைமைக்கு ஒரு முழுக்கு; உடையவனுக்கு ஒன்பது முழுக்கு" என்று சொல்வார்கள். இறைவன் உடையவன். நாம் அவன் உடைமை நம்மைக் காப்பாற்ற வேண்டும் என்று அவனுக்கு உள்ள கருணை நாம் அவனுக்கு ஆளாக வேண்டும் என்று நமக்குள்ள ஆர்வத்தைவிடப் பன்மடங்கு அதிகமானது.

நாம் அவனுக்கு ஆள் என்று நினைக்காவிட்டாலும் அவன் நமக்குப் பிரானாகத்தான் இருக்கிறான். 'இறைவன் இல்லை என்கிறேன். அவன் உண்மையில் இருப்பனானால் என் தலைமேல் இடி விழச் செய்யட்டும்" என்று சிலர் கொக்கரிக்கிறார்கள். அது கண்டு ஆண்டவன் கோபம் கொள்வதில்லை. அவர்களுடைய அறியாமையைக் கண்டு தனக்குள்ளே நகைத்துக் கொள்கிறான். உடம்புக்கு ஆகாதென்று, தான் வேண்டுமளவு தின்பண்டத்தைத் தாய் தராவிட்டால் குழந்தை, "உன்னைக் குத்துவேன்; கொல்லுவேன்" என்று சொல்கிறான். அதைக் கேட்டுத் தாய் நடுநடுங்கி, "ஐயோ! போலீஸ்காரரைக் கூப்பிடுங்கள்" என்றா சொல்வாள்? அவன் வார்த்தைகளைக் கேட்டு அவள் சிரிப்பாள். ஆண்டவனும் தாயைப் போலத்தான் நம்முடைய அறியாமையை கண்டு சிரித்துக்கொண் டிருக்கிறான்.

ஆயினும் தாய்க்குத் தன் குழந்தை திருந்தவேண்டும் என்ற எண்ணம் வன்மையாக இருப்பது போல இறைவனாகிய பிரானுக்கு நாம் அவனுக்கு ஆளாகி நலம் பெறவேணடும் என்ற ஆர்வம் மிகுதியாக இருக்கிறது. ஆகவே நாம் அவனைப் பிரானென்று அறிந்தாலும் அறியாவிட்டாலும் அவன் என்றும் நமக்குப் பிரானாக, தலைவனாக, பரமோபகாரியாக இருக்கிறான். அவன் நம்மை ஆட்கொண்ட பின்பு இந்த உண்மை புலனாகிறது. அவனுடைய பெருங்கருணையை நினைந்து இன்புறுகிறோம்; உருகுகிறோம்.

அம்மையார் இறைவன் என்றும் பிரானாக உள்ளவன் என்பதை நினைவூட்ட முதலில் பிரானாகக் கொண்டதைச் சொன்னார். பின்பு ஆட்பட்டதைச் சொன்னார்.

இப்போது அந்த இரண்டையும் நினைந்து வியக்கிறார்.

"அதுவேபிரான் ஆமாறு: ஆட்கொள்ளுமாறும் அதுவே."

தன்னை இதுகாறும் நாடாமல் போதை வீணாக்கி, யார் யாரையோ தலைவனாகக் கொண்டானே என்று அடியவனைப் புறக்கணிப்பதில்லை

இறைவன். அவன் ஆசுதோஷி; கணத்தில் மகிழ்பவன். எத்தனை தவறு செய்தாலும் அதை மறந்து தன்பால் அடைக்கலம் புகுந்தால் உடனே ஏற்றுக்கொண்டு அருள்பாலிக்கும் கருணைக்கடல் அவன். “பிரானாககக் கொள்ளலுமே இன்புற்றேன்” என்று முன்பு சொன்னார். உலகில் யாரையேனும் ஒருவன் புகலடைந்து தலைவனாகக் கொள்ளுவானானால் அவனைத் தலைவன் உடனே ஏற்றுக்கொண்டு, அவனுக்கு நன்மை செய்வதில்லை. அப்படிச் செய்வதற்கு அவனுடைய அணுக்கத் தொண்டார்கள் விடமாட்டார்கள். நாம் எல்லாம் இத்தனை காலம் காத்திருக்க, நேற்று வந்தவனுக்கு உடனே சிறப்பா? என்று பொருமுவார்கள் வந்தவனைச் சேய்மையிலே வைத்து, அவனைப் பல வகையிலும், சோதனை செய்து மெல்ல மெல்ல அணுகி வரச்செய்து, பிறகே நலம் செய்வார்கள். இது மற்றத் தலைவர்களின் இயல்பு.

சிவபெருமானோ அத்தகையவன் அல்லன்.”நீயே பிரான், என்று புகலடைந்தால் நம்மை வாரி அணைத்துக்கொள்வான்; கூட்டத்தில் வழி தெரியாமல் போய் அழுக்குக்குழியில் விழுந்த குழந்தை வந்து அணுகினால், அவன் அழுக்குடம்புடையவன் என்று கருதாமல் உடனே ஆவலுடன் அணைத்துத் தழுவும் தாயைப் போன்ற அன்புடையவன் அவன். இது மிகவும் உயர்ந்த கருணை அல்லவா? அதை நினைக்கிறார்.

“அதுவே பிரான் ஆமாறு”

அது என்றது முன் ஒரு பாட்டில் சொன்னதைச் சுட்டுவது மாத்திரம் அன்று; தாம்பெற்ற இன்பத்தை உள்ளூற எண்ணி உருகும் மனப்பாங்கையும் அந்தச் சுட்டுச் சொல் குறிப்பிக்கிறது. இதை நெஞ்சறி சுட்டு என்பர்.

அவன் ஆட்கொள்வதும் பெரிய புதுமை, பரந்த உலகத்தில் மனத்தை மயக்கும் பொருள்கள் எவ்வளவோ இருந்தும் அவற்றிலே ஈடுபடாமல் தன்னையே நினைக்கச் செய்யும் கருணையை உடையவன் இறைவன். “ஒன்றே என் உள்ளத்தின் உள்ளடைத்தேன்”என்று சொல்லும் அளவுக்குத் தன் அடியாரைப் பக்குவப்படுத்தி ஆட்கொள்ளும் வித்தகன் அவன்.

‘ஆர் ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்’

என்று வியப்பார் மணிவாசகர். அம்மையார் அதையும் நினைக்கிறார்.

“ஆட்கொஅளும் ஆறும் அதுவே”

இறைவன் பிரானாகி நிற்பதும் கருணயினால் ஆட்கொள்வதும் எல்லோருக்கும் தெரிவதில்லை. அவன் தமக்கு வேண்டியவை வழங்காத லோபி என்றே பலர் நினைக்கிறார்கள். “சாமிக்குக் கண் இல்லை” என்று குறை கூறுபவர்களை நாம் அறிந்திருக்கிறோமே! “சாமியா? அப்படி ஒருவர் இருக்கிறாரா?, அப்படியானால் அவர் உறங்கிக் கொண்டிருக்க வேண்டும்” என்று சொன்ன அறிஞர்களும் இருக்கிறார்கள்.

இறைவனுடைய திருவருளைப் பெற்றவர்களுக்கே அவனுடைய பெருமையும் கருணையும் தெரியவரும். “அவன் எத்தகைய தலைவன் என்பதை நான் அறிந்திருக்கவில்லை; அவனுக்கு

ஆளாவது எப்படி என்றும் தெரிந்து கொள்ளவில்லை. அவனுடைய திருவருளுக்கு ஆளான பிறகு இவை விளங்குகின்றன. அவன் எத்தகைய தலைவன் எவ்வளவு ஆவலுடன் நம்மை ஆட்கொள்ளக் காத்திருக்கிருன் என்ற உண்மையும் இப்போது தான் தெரிய வருகிறது' என்று காரைக்காலம்மையார் சொல்கிறார்.

"அதுவே பிரானாமாறு
ஆட்கொள்ளுமாறும் அதுவே
இனிஅறிந்தோம்."

"நான் அறிந்தேன் என்றா சொன்னேன்? அவன் தகுதி, நான் அறிந்த இவற்றுக்குள்ளே அடங்கிவிடுமா? இதுகாறும் அறிந்து கொள்ளாதவற்றை அறிந்து கொண்டேன் என்பது உண்மை. அவனைப்பற்றிய இயல்புகள் அறிந்து கொண்டேன். அவன் தலைவனாகும் வண்ணமும் நம்மை ஆளாக்கும் வண்ணமும் தெரிந்து கொண்டேன். இதனால் அவனை முற்றும் தெரிந்து கொண்டது ஆகிவிடுமா?

அம்மையார் சிந்திக்கிறார். இறைவன் தன்மை முழுவதையும் உணர்ந்தவர் யார்? 'தன்மை பிறரால் அறியாத தலைவா' என்று மாணிக்கவாசகர் கூறினார். அவனைத் தலைவனாக எத்தனையோ அடியார்கள் உணர்கிறார்கள்: எல்லோரும் உணர்வது ஒரே வண்ணமாகவா இருக்கும்? அவரவர்கள் எந்த எந்த நிலையிலிருந்து உணர்ந்தார்களோ, அதற்கு ஏற்றபடி அவன் பிரானான வண்ணம் இருக்கும். அணைத்து ஆட்கொள்வதும் உண்டு. அடித்து ஆட்கொள்வதும் உண்டு. ஆகவே ஒருவர் உணர்ந்தபடியே யாவரும் உணர்ந்திருப்பார் என்று சொல்ல ஒண்ணாது.

உணவை உண்பதால் வயிற்றுப் பசி தீர்கிறது. பசி தீர்வதென்பது யாவருக்கும் பொதுவான அநுபவம். ஆனால், உணவுப் பொருள்களின் வகை, அவற்றைச் சமைக்கும் வகை, அவற்றின் சுவை, அவற்றை உண்ணும் முறை முதலியன வேறுபடுகின்றன. அவ்வாறே இறைவனால் அடையும் முடிந்த முடிவான இன்பம் ஒன்றுதான் என்றாலும், அவனைத் தலைவனாக அடையப்பெறும் முறையும், அவனுக்கு ஆளாகும் வண்ணமும் பல்வேறு வகைப்படும். ஆதலால் ஒருவர் தாம் அவனைத் தலைவனாகப் பெற்றபடியே எல்லோரும் பெற்றிருப்பார் என்றும், தம்மை ஆட்கொண்டபடியே யாவரையும் ஆட்கொண்டிருப்பான் என்றும் சொல்ல இயலாது.

இந்த நினைவு அம்மையாருக்கு எழுகிறது, "இப்போது நான் அறிந்தேனே, அது மட்டுந்தானா அவனுடைய பெருமை?" என்று தம்முடைய கேட்டுக் கொள்கிறார்.

"அதுவே தகவு?"

சிவ பெருமானுடைய இயல்புகள் யாவுமே விசித்திரமானவை. வேறு யாரிடத்திலும் இல்லாதவை அவை. அவனுடைய அடையாள மாலை கொன்றை. கொன்றையை வேறு யாரும் அணிவதில்லை. அணியத்தக்க மலர்களையெல்லாம் பிறர் அணியும்படி வழங்கிவிட்டுத் தான் கொன்றைமலரை அணிகிறவன் அவன். அது கார்காலத்தில் மலர்வது, பனிக் காலத்தில் கருகி வாடுவது. அவன்

அடையாள மாலை இப்படியென்றால், அவன் திருமுகத்தில் உள்ள கண் ஒன்றும் அவனை இனம் காட்டும். வேறு யாருக்கும் இல்லாத ஞானக்கண்ணாகிய நெற்றிக்கண்ணை உடையவன் அவன். அதுவே அவனுக்குப் பெருமை; நெற்றி யிலே, கண் உடையவனா' என்று வழங்கும் உலக வழக்கே அதன் பெருமையைக் காட்டும். இமையாத முக்கண், மூவரிற் பெற்றவர்" என்பது மாணிக்கவாசகர் திருவாக்கு. ஒப்பற்ற ஞானக்கண்ணை விளக்கமுடைய நெற்றியிலே படைத்த பெருமான் சிவபிரான். மற்றவரிடம் இயல்புகளை அறிந்து வரையறையாகச் செய்வது போல அவன் திறத்தில் சொல்ல ஒண்ணாது. இவற்றையெல்லாம் நினைத்துப் பார்க்கிறார் அம்மையார். 'கொன்றை மலரை அணிந்தவன்; நெற்றிக்கண்ணை உடையவன்; அவன் இயல்பு அதுமட்டுந்தானா?' என்று கேட்கிறார். அதுவே பிரானானவாறு; அதுவே உட்கொள்ளுமாறு' என்று என்று சொன்னேன். ஆனால், அதுமட்டுமா அவன் பெருமை' என்று பாட்டிலே கேட்கிறார்.

"அதுவே பிரானாமாறு: ஆட்கொள்ளுமாறும்
அதுவே இனிஅறிந்தோம்; ஆனால் அதுவே
பனிக்கு அணங்கு கண்ணியார், ஒள்நுதலின் மேல்ஓர்
தனிக்கண் அங்கு வைத்தார் தகவு?

இறைவன், "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்று பாடுவார் மாணிக்கவாசகர். அப்படி, தாம் உணர்ந்ததாகச் சொல்லி உருகிய அம்மையார், என்ன உணர்ந்து விட்டோம் என்று பிறகு அடக்கத்துடன் சொல்கிறார். முன் பகுதியில் பெருமிதமும் பின்பகுதியில் அடக்க உணர்வும் புலனாகின்றன.

இது காரைக்கால் அம்மையார் அருளிய அற்புதத்திருவந்தாதியில் பன்னிரண்டாம் பாட்டு.

## திருமந்திரம்

பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த அருளால் துரிசற்ற யோகத்தில்
உய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே.

**விளக்கம்:**

சிவபத்தன் ஆனவன் திருமுறையில் கூறியபடியான ஒழுக்கம், நோன்பு இரண்டினையும் சிறப்பாகச் செய்துவர இயற்கைத் திருவருள் மேலும் துணைசெய்யும். அத் துணையால் குற்றம் நீங்கும் யோகம் கிட்டும்

******

அன்பின் உருகுவன் நாளும் பணிசெய்வன்
செம்பொன்செய் மேனி கமலத் திருவடி
முன்புநின்று ஆங்கே மொழிவது எனக்கருள்
என்பினுள் சோதி இலங்குகின் றானே.

**விளக்கம்:**

சித்தம் சிவமாயபத்தன் எல்லையிலாத் தலையன்பால் உருகுவன். அவன் எந்நாளும் அடிமைப் பணி செய்து ஒழுகுவன். பொன் போலும். திருமேனியும் செந்தாமரைகள் போன்ற திருவடியும் உடையவன் சிவன். அவன் அடியேன் முன்நின்று அருமறை அருளத் திருவடியுணர்வு கைவந்த ஒரு மெய்யடியாரை ஊர்ந்து செறிந்த அறிவொளியாய் விளங்கி அருள்வன்

# பராசரர் இடர் களைந்த பரந்தாமன்





**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

நீரின்றி அமையாது உலகு. நீருக்காக மூன்றாம் உலகப் போர் ஏற்படலாம் என்பது எதிர்காலத்தின் நிலை. இன்று மட்டுமல்ல நீர் குறித்த சிக்கல்கள். திரேதா யுகத்திலேயே இருந்துள்ளது. அக்காலத்தில் நீர் நிலையைக் காப்பதற்காக இறைவன் தோன்றி அந்நீர்நிலைகளைக் கெடுத்தவர்களை அழித்திருக்கிறார்.

திரேதா யுகத்தில் மது என்னும் அரக்கன் உலகை ஆட்டிப் படைத்து வந்தான். அவனுக்குத் தஞ்சகன், தாண்டகன், கஜமுகன் என்று மூன்று மைந்தர்கள் பிறந்தனர். இவர்கள் அசுரர்களாய் இருந்தாலும் சிவபக்தியுடன் இருந்தார்கள். இவர்கள் சிவனை நோக்கிக் கடுந்தவம் இருந்தார்கள். இவர்களின் தவத்தை மெச்சிய முக்கண்ணனார் இவர்கள் முன் தோன்றி ”என்ன வரம் வேண்டும்” எனக் கேட்டார். இவர்களோ ”இறவா வரம் வேண்டும்” எனக் கேட்டார்கள். அப்படி ஒரு வரம் கொடுத்தால் இவர்களின் கொட்டத்தை அடக்க முடியாது என எண்ணிய சிவனார் “இறவா வரம் தர இயலாது. ஆனால் என்னால் உங்களுக்கு இறப்பு நேராது என்ற வரத்தை வேண்டுமானால் தருகிறேன்” என்றார்.

மனமகிழ்ந்த மூவரும் சிவபெருமானாலேயே தாங்கள் அழிக்கப்பட முடியாதவர்கள் என்பதால் மமதை கொண்டார்கள். முனிவர்களைக் கொடுமைப் படுத்தத் தொடங்கினார்கள். அவர்களைக் காக்க வந்த தேவர்களையும் தாக்கினார்கள். தேவர்கள் பரமேஸ்வரனிடம் தங்களைக் காக்க வேண்டினார்கள். அவரோ தான் அசுரர்களுக்கு வழங்கிய வரத்தைக் கூறி அவர்களைக் காக்கும்படி சாஸ்தாவிடம் கூறினார். தேவர்களை எல்லாம் ஓரிடத்தில் வைத்துக் காத்து வந்தார்.

அச்சமயம் நாடெங்கும் கடும் பஞ்சமும் வறட்சியும் ஏற்பட்டது. நீருக்காக மக்கள் அலைமோதிக் கொண்டிருந்தார்கள். குடிப்பதற்குக் கூட நீரின்றிப் போனது. அசுரர்களுக்கும் நாவரட்சி ஏற்பட்டு நன்னீருக்காக ஏங்கித் தவித்தார்கள். அவர்கள் தம் சேனைகளுடன் புறப்பட்டு நாலாபுறமும் ஆர்ப்பாட்டம் செய்தபடி நீரைத் தேடி வந்தார்கள்.



விண்ணாறு என்று வழங்கப்படும் வெண்ணாற்றங்கரையில் பராசரர் என்னும் முனிவர் தன் பர்ணசாலையை அமைத்து அமைதியாகத் தவம் செய்து வந்தார். முன்பொரு காலத்தில் பாற்கடலைக் கடைந்தபோது கிடைத்த அமிர்தம் விஷ்ணுவால் அவருக்குத் தேவலோகத்தில் வழங்கப்பட்டிருந்தது. அதைத் தான் மட்டும் உண்ணாமல் அந்த அமிர்தத்தின் சில துளிகளை அவர் இந்த வெண்ணாற்றிலும் சிந்திக் கலந்து வைத்திருந்தார். அதனால் உலகெங்கும் பஞ்சம் ஏற்பட்டாலும் இந்த ஆற்றில் உள்ள நன்னீர்ச் சுனை மட்டும் வற்றாமல் நீர் ஊறிச் சுவையுடன் இருந்தது.

தாகத்தோடு வந்த தஞ்சகன், தாண்டகன், கஜமுகன் தங்களின் அசுரப் பட்டாளத்தோடு இந்த நீரை ஆசைதீரக் குடித்து மகிழ்ந்தார்கள். அத்தோடு சும்மா இருக்காமல் அந்த நீரை மற்றவர் பயன்படுத்த முடியாத அளவு பாழ்படுத்தினார்கள். இதைக் கண்ட பராசர மகரிஷி அவர்களைத் தடுத்தார். தடுத்த பராசரரையும் எள்ளி நகையாடித் தாக்கினார்கள் அசுர சகோதரர்கள். வருந்திய அவர் பரந்தாமனிடம் முறை யிட்டார்.

தன் பக்தனுக்கு ஒரு குறை என்றால் சும்மா இருப்பாரா பரந்தாமன். மூவரில் மூத்தவனான தஞ்சகனை அழிக்கத் தன் சக்ராயுதத்தை ஏவினார் எம்பெருமாள். தன் தலைபோகும் தருணத்தில் தவறுணர்ந்து அவன் மன்னிப்புக் கேட்க மனம் இரங்கினார் விஷ்ணு. பரந்தாமனால் தான் வீழ்ந்த இந்த பராசர க்ஷேத்திரம் இனித் தன் பெயரால் வழங்கப்பட வேண்டும் என வரம் கேட்டான். அவன் வேண்டுதலை ஏற்று தஞ்சகன் முக்தி பெற்ற அத்தலம் இனித் தஞ்சாவூர் என வழங்கும் என்ற வரம் அளித்தார் பெருமாள்.

தஞ்சகனின் சகோதரன் கஜமுகன் யானை உருவம் எடுத்துச் சண்டை யிட்டான். அவன் முன் பரந்தாமன் நரசிம்மமாகத் தோன்றி அவனை வதம் செய்தார். உயிர் பிரியும் தருவாயில் அவனும் மன்னிப்பு வேண்ட அவனுக்கும் மோட்சம் அளித்தார். அவன் கொல்லப்பட்ட இடம் தஞ்சை யாளி என்று அழைக்கப்படுகிறது. நரசிம்மரின் உக்கிரத் தோற்றம் கண்ட பராசரர் அவர் தன் உக்கிரம் தணியுமாறு யோகத்தில் அமர்ந்து துதித்தார். பராசரரின் வேண்டுகோளை ஏற்று நரசிம்மர் உக்கிரம் தணிந்து புஷ்கரணியில் நீராடித் தன் உபய நாச்சியார்களுடன் காட்சி அளித்தார்.

இவர்கள் இருவரின் மரணத்தையும் கண்டு பயந்த மூன்றாவது அசுரன் தாண்டகன் தான் தப்பிக்க வேண்டிப் பாதாள லோகத்தில் இறங்கினான். இதைக் கண்டு பரந்தாமன் வராஹ உருவம் எடுத்துப் பாதாள லோகம் சென்று அவனை அழித்தார். தாண்டகனை அழித்ததால் இந்த இடம் தண்டகாரண்யம் என்று அழைக்கப்பட்டது இந்த இடம்தான் இப்போது ஸ்ரீ முஷ்ணம் என்று அழைக்கப்படும் இடமாகும். இவனுக்கும் பரந்தாமன் இறங்கி மன்னித்து அருளி மோட்சம் வழங்கினார்.

தன் பக்தனான பராசர மகரிஷிக்கு இரங்கி அவரைக் காக்க வந்தது மட்டுமல்ல நீரைக் கெடுத்தவர்களை அழித்து நீர் நிலைகளைக் காக்கப் பரந்தாமனே தோன்றி இருக்கிறார் என்றால் நீரின் மகத்துவம் எவ்வளவு புனிதமானது என்பதை நாம் உணர வேண்டும்.

## சிவாலயங்களின் சிறப்புகள் - 8



சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

வே.இராமசாமி, B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

# சிதம்பரம்

தேவாரப் பாடல் பெற்ற திருமுறைத்தலங்களில் முதலாவது தலம். பஞ்சபூத தலங்களில் ஆகாய ஸ்தலம். பஞ்ச சபைகளில் சிதம்பரம் பொற்சபை ஆகும். பூலோக கைலாயம் என்று அழைக்கப்படுகிறது. திருநீலகண்ட நாயனார் அவதாரத் தலம்.

**மூலவர்:** நடராஜர், சபாநாயகர், கனக சபாநாயகர் ,அம்பலவாணர், அம்பலக் கூத்தர் என்று அழைக்கப்படுகிறார்.

அன்னை சிவகாமசுந்தரி என்ற திருநாமத்துடன் அருள் தருகிறார்.

சிவபெருமான் இங்கு திருமூலநாதர் மூலட்டானேஸ்வரர் என்று அழைக்கப்படுகிறார். மூலவர் திருமூலனாதர் சுயம்பு மூர்த்தியாக அருள்புரிகிறார். அம்பாள் பெயர் உமையாம்பிகை.

**தல விருட்சம்:** தில்லைமரம் (இப்பொழுது தில்லை மரங்கள் காணப்படுவதில்லை)

**தீர்த்தம்:** சிவகங்கை, பரமானந்த கூபம், வியாக்கிரபாத தீர்த்தம், அனந்த தீர்த்தம், நாகச்சேரி, பிரம தீர்த்தம், சிவப்பிரியை, புலிமேடு, குய்ய தீர்த்தம், திருப்பாற்கடல்.

**வழிபட்டோர்:**

நந்தனார், சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர்,பதஞ்சலி, வியாக்ரபாத முனிவர்,ஆதிசங்கரர், அருணகிரிநாதர், திருமூலர்.

**பாடியவர்கள்:** அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர்.

**கோயிலின் அமைப்பு:**

51 ஏக்கர் பரப்பளவில், நான்கு திசைக்கென ஒரு கோபுரமாக நான்கு கோபுரங்களும், ஐந்து சபைகளும் (சித்ர சபை, கனக சபை, நாட்டிய சபை, ராஜ சபை, தேவ சபை) உடையது . இவ்வாலயத்தில்



உள்ள கிழக்கு கோபுரத்தில் நூற்றியெட்டு பரதநாட்டிய நிலைகளில் உள்ள சிற்பங்களைக் காணமுடியும். மேலும் இங்கு மூலவர் சிலை இருக்கும், இடம் கனகசபை என்று அழைக்கப்படுகிறது. இந்த சபை, முதலாம் பராந்தகன் என்றும் சோழ மன்னனால் பொற்கூரை வேயப்பட்டது. அதனால் இந்தச் சபை பொன்னம்பலம் என அழைக்கப்படுகிறது; வடமொழியில் கனகசபை எனக் கூறப்படுகிறது.

சைவ சமயத்தவர்களுக்கு கோயில் என்பது சிதம்பரம் நடராசர் கோயிலையே குறிக்கும். அந்தளவுக்கு சைவமும் சிதம்பரமும் பிணைந்தவை. பெரியகோவில் என்றும் சிலர் அழைக்கின்றார்கள்.

சிற்றம்பலம் உள்ளே செல்வதற்கு ஐந்துபடிகள் பஞ்சாக்கரப்படிகள் உள்ளன; இப்படிகளின் இரு புறமும் யானை உருவங்கள் உள்ளன. பதினான்கு சாஸ்திரங்களில் ஒன்றை இப்படியில் வைத்தபோது, இப்படிகளிலுள்ள யானைகளில் ஒன்று தன் தும்பிக்கையால் அந்நூலையெடுத்து நடராசப்பெருமான் திருவடியில் வைத்தமையால் அந்நூல் 'திருக்களிற்றுப்படியார்' என்ற பெயர் பெற்றது.

ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த ஸ்ரீசக்ரம் அம்மன் சன்னதியில் உள்ளது. அர்த்தஜாம பூஜை இத்தலத்தின் தனி சிறப்பு. அர்த்தஜாம பூஜையில் உலகில் உள்ள அனைத்து தெய்வங்களும் கலந்து கொள்வதாக ஐதீகம். இதை அப்பர் புலியூர் (சிதம்பரம்) சிற்றம்பலமே புக்கார் தாமே எனப்பாடுகிறார். சேக்கிழார் இங்குள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் தான் பெரியபுராணம் பாடி அரங்கேற்றினார். அருணகிரிநாதர் இத்தலத்தில் உள்ள முருகப்பெருமானை தனது திருப்புகழில் பாடியுள்ளார்.

சிதம்பரம் நடராஜர் கோவிலில் உள்ள சிவகங்கை தீர்த்தக்கரையில் திருத்தொண்டத் தொகையீச்சரம் என்ற பெயரில் ஒன்பது லிங்கங்கள் உள்ளன. இந்த லிங்கங்களை ஒன்பது

தொகையடியார்களாக எண்ணி வழிபடுகின்றனர்

சிதம்பரம் நடராஜர் கோவிலில் எட்டுத் திசைகளிலும் சாஸ்தாவின் எட்டு அவதாரங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. அந்த அவதாரங்கள் மகா சாஸ்தா, ஜகன்மோகன சாஸ்தா, பாலசாஸ்தா, கிராத சாஸ்தா, தர்மசாஸ்தா, விஷ்ணு சாஸ்தா, பிரம்ம சாஸ்தா, ருத்ர சாஸ்தா.

அறிவியல் அறிஞர்களின் கருத்துப்படி இந்த சிதம்பரம் கோவில் சுமார் 2000 வருடங்களுக்கு முன்பு தோன்றியது என்று கூறுகிறார்கள். ஆனால் 5000 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட திருமூலர் தான் எழுதிய திருமந்திரம் என்ற நூலில் சிதம்பரம் கோயிலைப் பற்றி குறிப்பிடுகிறார்

நடராஜப் பெருமான் முன்பு தீட்சிதர்கள் நின்று பூஜை செய்யும் இடம் ருத்ரபீடம் என்றும் நடராஜ மூர்த்தியும், சிவகாமி அம்மையும் வீற்றிருக்கும் பீடம் மகேஸ்வர பீடம் என்றும் அழைக்கப்படுகிறது. இது சுமார் 6 அல்லது 7 அடி நீளமும் 3 அடி அகலமும் கொண்டு தங்கத்தால் மூடப்பட்டிருக்கும். மகேஸ்வர பீடத்துக்கு இரண்டு படிகள் உண்டு. மேற்குப்படியில் சந்திரமௌலீஸ்வரர் ஆகிய ஸ்படிக லிங்கமூர்த்தியும், ரத்தின சபாபதி ஆகிய ரத்தினத்தாலான நடராஜ மூர்த்தியும் தனித் தனிப் பெட்டிகளில் எழுந்தருளியுள்ளனர். மகேஸ்வர பீடத்தில் ரத்தினம் இழைத்த இறைவனின் திருவடிகள் சிவ பாதுகை எனும் தங்கத் தட்டில் இறைவனுக்கு வலப் பக்கத்தில் வைக்கப்பட்டுள்ளது. நடராஜ மூர்த்தியின் வலப்புறத்தில் ஸ்ரீமுகலிங்கம் உள்ளது. நடராஜமூர்த்தியும் சிவகாமி அன்னையும் வீற்றிருக்கும் மகேஸ்வர பீடத்தில் பத்து தூண்கள் இருக்கின்றன. அதில் உள்ள நான்கு தூண்கள் நான்கு வேதங்களையும் ஆறு தூண்கள் ஆறு சாஸ்திரங்களையும் குறிக்கின்றன. சிதம்பர ரகசியம் எனப் போற்றப்படும் ஸ்ரீரகசியம் இருக்கும் பீடம் சதாசிவ பீடம். இறைவன் ஓர் உருவும் ஒரு நாமமும் இன்றி சிற்பர வியோமமாக அண்ட சராசரங்களையும் தொழிற்படுத்தி நடத்தி வரும் ஞான வடிவமே சிதம்பர ரகசியம் என்கிற தத்துவத்தைச் சொல்லுகிறது.

திருச்சிற்றம்பலத்தின் மேல் அமைந்த 64 சந்தனக் கைமரங்களும் 64 கலைகளைக் குறிக்கின்றன சித்சபையின் 9 கலசங்கள் நவசக்திகளைக் குறிக்கும். இதில் உள்ள 224 அடைப்புப் பலகைகள் 224 உலகங்களைக் குறிக்கின்றன. சிதம்பர ரகசியத்தை கனகசபையிலிருந்து 96 துவாரங்கள் உள்ள பலகணி (ஜன்னல்) வழியாகத் தரிசிக்க வேண்டும். இந்த 96 துவாரங்கள் 96 தத்துவங்களைத் தெரிவிக்கின்றன!

சிதம்பரம் கோவிலின் அதிசயம்: மனித உடலை குறிப்பிடும்படி சிதம்பரம் கோயில் கட்டமைக்கப்பட்டுள்ளது. இந்தத் திருக்கோவிலுக்கு 9 வாயிற் கதவுகள் உள்ளது. அவை மனித உடலில் உள்ள 9 துவாரங்களை குறிக்கும். ஒரு மனிதன் ஒரு நாளைக்கு சுவாசிக்கும் கணக்கு 21, 600 முறையாகும். குறிக்கும் விதமாக பொற்கோயில் 21,600 ஓடுகள் உள்ளன. மனித உடலின் மொத்த நாடிகள் 72000. இவை ஆணிகளாக அந்தக் கூரையில் அடிக்கப்பட்டிருக்கின்றன.

நம் உடலில் இதயம் இடப்பக்கம் இருக்கிறது. இறைவிக்கு தனது இடபாகம் தந்த இறைவனின் கருவறையும் கோயிலின் இடப்புறம் இருக்கிறது. நமசிவய எனும் ஐந்து படிகள் ஏறினால் பொன்னம்பலம் கொண்ட சிதம்பரத்தாரை



தரிசிக்கலாம். இதயத்தின் நான்கு சுவர்களை போலவே அங்கே நான்கு தூண்கள் அமைக்கப்பட்டிருக்கிறது.

பொற் கூரையின் மேல் இருக்கும் 9 கலசங்கள், 9 வகையான சக்தியைக் குறிக்கின்றது.அர்த்த மண்டபத்தில் உள்ள 6 தூண்கள், 6 சாஸ்திரங்களையும்,அர்த்த மண்டபத்தின் பக்கத்தில் உள்ள மண்டபத்தில் உள்ள 18 தூண்கள், 18 புராணங்களையும் குறிக்கின்றது.

யோசித்தால், இந்த கோயிலே உலக அதிசயங்களில் முதலாவதான கோயிலாக இருக்க முடியும்.

## தல வரலாறு

முகலாயர் படையெடுப்பின் போது தில்லைவாழ் அந்தணர்கள் எனப்படும் தீட்சிதர்கள் கி.பி. 1648ல் தில்லை ஸ்ரீநடராஜரையும் ஸ்ரீசிவகாமி அம்மையையும் தென்னாட்டுக்கு எடுத்துச் சென்று பாதுகாக்க எண்ணினராம்.

இரண்டு மரப் பேழைகளில் ஸ்ரீநடராஜரையும், ஸ்ரீசிவகாமி அம்மையையும் அமரச் செய்து இரவு நேரங்களில் மட்டுமே பயணம் மேற்கொண்டு, தில்லைக்குத் தென்பகுதியாக விளங்கும் மதுரையை நோக்கிச் சென்று குடுமியான்மலையை அடைந்தனர். பின்னர் அங்கிருந்து கேரள மாநிலம் புளியங்குடி என்ற இடத்தை அடைந்தனர். அங்கு ஒரிடத்தில் பூமியிலே குழி தோண்டிப் பேழைகளை மறைத்து வைத்து அந்த இடத்தில் ஒரு புளிய மரத்தையும் நட்டனர். பின்னர் தில்லை திரும்பினர். தில்லையில் அமைதி திரும்பிய சுமார் 35 ஆண்டுகளுக்குப் பிறகு, தில்லை வாழ் அந்தணர்களின் இளம் தலைமுறையினர் குழுக்களாகப் பிரிந்து சென்று தேடும் பணியில் ஈடுபட்டனர். அவ்வாறு பிரிந்து சென்றவர்களில் ஒரு குழுவினர் புளியங்குடியை அடைந்தனர். அங்கே பல பேர்களிடமும் விசாரித்தனர். யாருக்கும் தெரியவில்லை. இந்நிலையில், ஒரு வயதான குடியானவன் தன்னுடைய வேலையாளிடம், இந்த மாட்டைக் கொண்டு போய் அம்பலப் புளியில் கட்டு என்றாராம். இதைக் கேட்டதும் இவர்களுக்கு அது குறித்த விளக்கத்தைக் கேட்க வேண்டும் என்ற ஆவல் தோன்றியுள்ளது. அந்த வேலையாளிடம் கேட்ட போது அவன், எனக்கு எதுவும் தெரியாது, எங்கள் முதலாளியிடம் கேட்டு தெரிந்துகொள்ளுங்கள் என்று சொல்லி யிருக்கிறான்.

முதலாளியிடம் சென்று கேட்ட போது அவரோ, இங்கே ஆசான் ஒருவர் இருந்தார். அவர் பல காலங்களாக இந்த பகுதியில் வாழ்ந்து வந்தார். தினமும் இந்த அம்பலப் புளி அடியில் வழிபட்டு வந்தார். அவர் தான் அந்த சிறிய பொந்தில் திருவுருவங்களைக் கண்டாராம்.

இந்த இடத்தில் விலைமதிப்பில்லாத ஒரு சுவாமி இருக்கிறார் என்றும், அதனை அறிந்தவர்கள் ஒரு நாள் இங்கே வருவார்கள். அதுவரை இதைப் பாதுகாக்க வேண்டும் என்றும், அவர்கள் உண்மையானவர்களா என்று சோதித்து அவர்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்றும் சொன்னார் என்றார். இவர்களோ, நாங்கள் தான் அந்த மூலமூர்த்தியின் உரிமைதாரர்கள் என்று விளக்கி அவரிடம் ஒப்புதல் பெற்றுக்கொண்டு தில்லையை அடைந்தார்கள். பின்னர் பல நூறு தில்லைவாழ் அந்தணர்கள் அந்த இடத்தை அடைந்து, தக்க ஆதாரங்களை விளக்கிச் சொல்லி, அவர் சம்மதத்துடன் அந்த இடத்தைத் தோண்டி தில்லை நடராஜரையும், சிவகாமி அம்மையையும் வெளியே எடுத்தனர். பின்னர் தக்க பாதுகாப்புடன் அதே போன்ற பேழைகளில் வைத்து தில்லை நோக்கி எடுத்து வந்தனர். வரும் வழியில் திருவாரூர் ஸ்ரீதியாகராஜர் கோயிலின் சபாபதி மண்டபத்தில் சிலகாலம் வைத்திருந்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டு வைத்தீஸ்வரன் கோயில் வழியாக தில்லைக்கு வந்தார்கள்.

1686ல் மறுபடியும் தில்லையில் பொன்னம்பலத்தில் ஸ்ரீநடராஜரையும், ஸ்ரீசிவகாமி அம்மையையும் பிரதிஷ்டை செய்து, பல திருப்பணிகள் செய்து, மஹா கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது என்று தல வரலாறு கூறுகிறது.

## சிதம்பர ரகசியம்:

சித் + அம்பரம் = சிதம்பரம். சித் = அறிவு, அம்பரம் = வெட்டவெளி. மனிதா! உன்னிடம் ஒன்றுமே இல்லை என்பது தான் அந்த ரகசியத்தின் பொருள். சித்ர சபையில் சபாநாயகரின் வலப்பக்கத்தில் உள்ளது ஒரு சிறு வாயில். இதில் உள்ள திரை அகற்றுப்பெறும். ஆரத்தி காட்டப் பெறும். இதனுள்ளே திருவுருவம் ஏதும் தோன்றாது. தங்கத்தால் ஆன வில்வ தளமாலை ஒன்று தொங்கவிடப்பட்டுக் காட்சியளிக்கும். மூர்த்தி இல்லாமலேயே வில்வதளம் தொங்கும்.

இதன் ரகசியம் இறைவன் இங்கு ஆகாய உருவில் இருக்கின்றார் என்பதுதான். ஆகாயத்துக்கு ஆரம்பமும் கிடையாது, முடிவும் கிடையாது. அவனை உணரத்தான் முடியும் என்பதே இதன் அர்த்தம். பஞ்சபூத தலங்களில் சிதம்பரம் ஆகாயத்தலமாகும். சிதம்பர ரகசிய ஸ்தானத்தில் அம்மனுக்குரிய ஸ்ரீசக்ரத்தையும், சிவனுக்குரிய சிவசக்ரத்தையும் இணைத்து, ஒன்றாக பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதாக ஒரு தகவல் உண்டு. இந்த சக்ரத்தில் நடராஜப்பெருமான் ஐக்கியமாகி, தன் ஆனந்த நடனத்தினால் உலகைப் படைத்து, காத்து, மறைத்து, அழித்து, அருளிக் கொண்டிருக்கிறார்.

## மூவர் பாடிய தேவாரப் பாடல்களை கண்டெடுத்த ஸ்தலம்

திருநாரையூரைச் சேர்ந்த நம்பியாண்டார் நம்பி என்பவரும் ராஜராஜ சோழனும் திருநாரை பொல்லாப் பிள்ளையாரை வணங்கி சிதம்பரம் வந்து திருக்கோயிலில் கரையான் புற்று மூடி கிடந்த இடத்தில் உள்ள ஓலைச்சுவடிகளை எடுத்து தேவாரப் பாடல்களை உலக மக்களுக்கு தெரியப்படுத்தினார்கள் ஓலைச்சுவடி கள் கரையானின் பசிக்கு இரையாகிவிட்டன

திருவாரூரில் பிறந்தால் முக்தி. காஞ் சியில் வாழ்ந்தால் முக்தி. காசியில் இறந்தால் முக்தி. திருவண்ணாமலையை நினைத்தால் முக்தி சிதம்பரத்தில் நடராஜரையும் திருமூலநாதரையும் தரி சித்தாலே முக்தி....

(தொடரும்)

# பெரியபுராணக் கதைக் களம்

## பகுதி – 3

அன்பர்களே !

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாக பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாக காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.



# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

26.05.2024 அன்று சிங்கப்பூர் உள்துறை மற்றும் சட்டத்துறை அமைச்சர் மாண்புமிகு திரு.சண்முகம் அவர்கள் நமது தென் சபாநாயகர் கோயிலுக்கு வருகை தந்து தரிசனம் செய்தார்கள்.

1.06.2024 அன்று சென்னை உயர்நீதிமன்ற நீதியரசர் மாண்புமிகு திரு.ஜி.ஆர். சுவாமிநாதன் அவர்கள் நமது தென் சபாநாயகர் கோயிலுக்கு வருகை தந்து தரிசனம் செய்தார்கள்.

## ஆனி மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 14.06.2024 | வளர்பிறை அஷ்டமி | வைரவர் வழிபாடு |
| 18.06.2024 | வளர்பிறை ஏகாதசி | பெருமாள் வழிபாடு |
| 19.06.2024 | பிரதோஷம் | |
| 25.06.2024 | சங்கடஹரசதுர்த்தி | விநாயகர் வழிபாடு |
| 29.06.2024 | தேய்பிறை அஷ்டமி | வைரவர் வழிபாடு |
| 3.07.2024 | பிரதோஷம் | |
| 12.07.2024 | ஆனித் திருமஞ்சனம் | ஸ்ரீ சிவகாமி அம்மன், ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்தி மகா அபிஷேகம் |
| 14.07.2024 | வளர்பிறை அஷ்டமி | வைரவர் வழிபாடு |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

அவர்களிடத்தில் அன்பர்கள் கேட்ட வினாக்களும் அதற்கு அவர்கள் அளித்த விளக்கங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கேட்டுப் பயன்பெற வேண்டுகிறோம்.

**வினா – 1** விளக்கம்

1. சைவராகிய நீங்கள் வைணவ காப்பியமான
   கம்ப இராமாயணத்திற்கு விழா எடுக்கிறீர்களே ?

**வினா – 2** விளக்கம்

2. கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன்
   நற்றாள் தொழார் எனின்.
   கடவுளை அடைவது தான் கல்வியின் பயனா

**வினா – 3** விளக்கம்

3. நம் சமயத்தில் இறைவனை அடைவதற்கு
   கல்வி ஒரு தடை என்று சொல்லுகிறார்களே.
   உங்கள் கருத்து என்ன

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள "கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்" சுமார் 43,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

archive.org/details/@koviloor_andavar_library

INTERNET ARCHIVE

WEB BOOKS VIDEO AUDIO SOFTWARE IMAGES

SIGN UP | LOG IN UPLOAD

ABOUT BLOG PROJECTS HELP DONATE CONTACT JOBS VOLUNTEER PEOPLE

Koviloor Andavar Library

(no description yet)

Share Favorite

UPLOADS LISTS POSTS REVIEWS COLLECTIONS WEB ARCHIVES

3,755 Results

Sort by: Weekly views Title Date archived Creator

Search uploads

Year Published

Media Type

Year

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 3775 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 3000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 250 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி 

திருநெல்லை – ஐப்பசி 

திருநெல்லை – கார்த்திகை 

திருநெல்லை – மார்கழி 

திருநெல்லை – தை 

திருநெல்லை – மாசி 

திருநெல்லை – பங்குனி 

திருநெல்லை – சித்திரை 

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழைப் பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.

# அமுதசுரபி இதழில் நம் மடம் பற்றிய கட்டுரை



## கோவிலூர் மடமும் இணையத் தமிழும்!

தமிழகத்தின் புகழ்பெற்ற மடங்களில் ஒன்று காரைக்குடி அருகே திருநெல்லையில் உள்ள கோவிலூர் மடம். பல சம்ஸ்க்ருத வேதாந்த நூல்களை முதன்முதலில் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டது இந்த மடம்தான்.

இந்த மடத்தை நிறுவிய பெருமை கோவிலூர் ஆண்டவர் என அழைக்கப்படும் முத்துராமலிங்க ஞான தேசிகருக்கு உரியது. கொற்றவாளீஸ்வரர் கோவில் அருகேதான் இந்த மடம் நிறுவப்பட்டது.

அந்த அழகிய கோயிலின் பல முக்கியமான திருப்பணிகளை ஆண்டவர் சுவாமிகளேதான் நடைபெறச் செய்தார். இந்தத் திருப்பணிகள் அடுத்துவந்த வீரப்ப ஞான தேசிக சுவாமிகளால் முடிக்கப்பட்டன.

தற்போது பீடத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ நாராயண ஞான தேசிக சுவாமிகள் தாமும் பற்பல திருப்பணிகளைத் தொடர்கிறார்.



ஸ்ரீநாராயண ஞான தேசிக சுவாமிகள்




வேத பாடசாலை, திருமுறைக் கல்லூரி, சிற்பக் கல்லூரி, இசைக் கல்லூரி எனப் பல முக்கியமான செயல்பாடுகள் இம்மடத்தில் தொடர்ந்த வண்ணம் இருக்கின்றன. தமிழகத்தின் கலை கலாசாரம் பண்பாடு முதலிய அனைத்து விழுமியங்களையும் கட்டிக் காக்கும் இம்மடத்தின் உயரிய பணிகள் கொண்டாடத் தக்கன.

இப்பணிகளில் எல்லாம் சிகரம் இந்த மடம் தன் நூலகத்தில் சேமித்து வைத்துள்ள மிக அரிய இலக்கிய மற்றும் ஆன்மிக நூல்கள்.

கோவிலூர் மடத்தின் தற்போதைய மடாதிபதி ஸ்ரீ நாராயண ஞான தேசிக சுவாமிகளுக்கு அறிவியலில் பேரார்வம் இருக்கிறது. கணிப்பொறியியல் தொடர்பான அனைத்து விவரங்களையும் தம் விரல் நுனியில் வைத்திருக்கிறார் அவர். கணிப்பொறியை சுலபமாகக் கையாண்டு தம் பல்வேறு செயல்பாடுகளில் மெருகேற்றிக் கொள்கிறார்.

அவரது வற்றாத அறிவியல் ஆர்வத்தால் பலர் அறியாத ஒரு மௌனப் புரட்சி அந்த மடத்தில் இப்போது நடந்து வருகிறது. அதுதான் கோவிலூர் மடத்தில் உள்ள அனைத்து அரிய நூல்களையும் அனைவரும் வாசிக்கும்படியாக இணைய வெளியில் பதிவேற்றும் முயற்சி.

கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகத்தில் இதுவரை நாற்பதாயிரத்திற்கும் மேற்பட்ட நூல்கள் இணைய வெளியில் ஏற்றப்பட்டு இடம்பெற்றிருக்கின்றன. இந்தப் பணி அங்குள்ள வாசிப்பு ஆர்வம் நிறைந்த குழுவினரால் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. நாள்தோறும் எண்ணற்ற நூல்கள் இணைய வெளிக்கு வந்துசேர்ந்த வண்ணம் இருக்கின்றன.

நிறைவாக ஒரு செய்தி: மாதந்தோறும் 'திருநெல்லை' என்ற ஆன்மிக மாத இதழும் இணைய இதழாக வெளியிடப்படுகிறது. சித்திரை மாத இதழ் இணையத்தில் வெளிவந்து விட்டது.

சுவாமிகளின் கருத்தாழமிக்க ஆசியுரை, சரஸ்வதி இராமநாதன் எழுதும் 'சுந்தரகாண்டம்' பற்றிய தொடர், காரைக்கால் அம்மையார் குறித்து கி.வா.ஜ. எழுதிய கட்டுரையின் மறு பதிப்பு, ஒவ்வோர் இதழிலும் கம்ப வாரிதி இலங்கை ஜெயராஜ் வாசகர்களின் கேள்விகளுக்குச் சொல்லும் பதில்கள் என இன்னும் பல சிறப்பம்சங்களுடன் திருநெல்லை கருத்துக் கருவூலமாக மலர்ந்து வருகிறது.

ஸ்ரீ நாராயண ஞான தேசிக சுவாமிகளின் வழிகாட்டுதலில் இயங்கும் கோவிலூர் மடத்தின் உயர்ந்த ஆன்மிகப் பணிகள் வியக்க வைக்கின்றன.

https://publuu.com/flip-book/265728/1133685

# நகரத்தார் நல்வாழ்வு அறநிலை

நம்மவர்களில் பொருளாதார ரீதியாக மிகவும் பின்தங்கியுள்ளவர்களின் பிள்ளைகளுக்குப் படிப்புச் செலவுகளுக்காக வட்டியில்லாத, திருப்பிச் செலுத்தும் கல்வி உதவித்தொகை வழங்கப்பெற்று வருவது அனைவரும் அறிந்ததே.

இந்த 2024–2025 கல்வியாண்டுக்கான உதவித்தொகை வழங்கப்பெற இருக்கிறது.

பாலிடெக்னிக் மற்றும் +2க்குப் பிறகு உள்ள பட்டப்படிப்பு, பட்ட மேற்படிப்புகளுக்கு வழங்கப்பெறும், இதுபற்றிய முழு விவரங்கள் கொண்ட விளக்கக் குறிப்பேடும், விண்ணப்பப் படிவமும் ஜூன் மாதம் 15ந் தேதி முதல் கோவிலூர் மடாலய அலுவலகத்திலும், நிர்வாக அலுவலகம் இயங்கும் 24/73, ஜவஹர் வீதி, நியூ டவுன், காரைக்குடி–630 001 (04565–237134) என்ற முகவரியிலும் பெற்றுக் கொள்ளலாம். பூர்த்தி செய்யப்பெற்ற விண்ணப்பங்கள் அறநிலைக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி 27.7.2024 ஆகும்.



# KOVILOOR ANDAVAR GROUP OF INSTITUTIONS, KOVILOOR

## ADMISSION OPEN FOR 2024 - 2025



## NACHIAPPA SWAMIGAL POLYTECHNIC COLLEGE






### Courses Offered

- Diploma in Civil Engineering (சிவில்)
- Diploma in Mechanical Engineering (மெக்கானிக்கல்)
- Diploma in Electrical and Electronics Engineering (எலக்ட்ரிக்கல் & எலக்ட்ரானிக்ஸ்)
- Diploma in Electronics and Communication Engineering (எலக்ட்ரானிக்ஸ் & கம்யூனிகேசன்)

**FOR ADMISSION CONTACT**  **04565-233624 , 98944 43796**



## KOVILOOR ANDAVAR COLLEGE OF PHYSICAL EDUCATION AND SPORTS SCIENCE







### Courses Offered

**UG Courses**

- B.P.E.S - 3 Years
- B.P.Ed - 2 Years
- B.Sc. sports coaching *subject to approval*..

**PG Courses**

- M.P.Ed - 2 Years

**Other Courses**

- Ph.D

**FOR ADMISSION CONTACT**  **9443887891 , 8754336865**